இப்போது
புதிய
தோற்றத்தில்!




# ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்டு கேஸ்டர் ஆயில்

பரட்டையான படியாத
கேசத்தையும் படியவைக்கும்
நாள் முழுதும் கேசத்தை
எடுப்பாக எழிலோங்கச்
செய்யும்.

பட்டுப்போன்ற படியும் கேசம்...
ஒளிசிந்தும் எழிலோங்கும் கேசம்...
ஆரோக்கிய நறுமணம் வீசும் கேசம்...!
நாள் முழுதும் எடுப்பாக விளங்கச்
செய்கிறது ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்டு
கேஸ்டர் ஆயில்.

ஸ்வஸ்திக் ஆயில்
மில்ஸ், பம்பாய்.

Shilpi SOM 17/69 TAM

# பினகா ஷார்ட் ஹெட்




**அதன் குறுந்தலை**



புகுந்திட இயலா
இடுக்குகளைத்
**துலக்கிட**

பிற டூத்பிரஷ்களால்
முடியா இடங்களை
**அணுகிட**

ஷார்ட்ஹெட். பினகாவின் மழுக்கப்பட்ட முனைகளை
உடையவை—ஈறுகளுக்கு ஊறுசெய்யாதவை



**ஒரு டூத்பிரஷ் வெறும் டூத்பிரஷ் ஷைவிட உயர்ந்தது அது பினகா வாக இருந்தால்**

**Binaca®**

ULKA-CTB-65 TAM

சௌமிய, மாசி, 25 : 1970, மார்ச் 8



# கல்கி

பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20 | ரூ. 10 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21 | ரூ. 10/50 |
| இதர நாடுகள் | ரூ. 40 | ரூ. 20 |

குழப்பம்

நெருப்பா!
எனக்கு
ஒன்றும்
தெரியவில்லையே!

நீங்கள் எதைச்
சொன்னாலும்
செய்கிறோம்!

முதல்

மந்திரிகள்

PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 29 ❀ இதழ் 32



# தமிழ்த்தாய் ஔவை

'ரகுபதி ராகவ' என்கிற கட்டுரைத் தொடர் கல்கியில் வாரா வாரம் வெளியாகி வருகின்றதல்லவா? இதை வாசகர்கள் கவனித்துப் படிக்கிறார்களோ இல்லையோ நான் அறியவில்லை. நான் வாசகர்களைக் கேட்டுக் கொள்வது என்னவென்றால் கல்கியில் வெளியாகும் மற்ற விஷயங்களைப் படிக்காமல் விட்டு விட்டாலும் 'ரகுபதி ராகவ' கட்டுரைகளைக் கட்டாயம் படித்துத் தெய்வ பக்தியை உறுதியாக்கிக் கொண்டு பயன் பெற வேண்டும். நாம் காண முடியாத காரணத்தினால் தெய்வம் இல்லை என்றும் நாஸ்திக வாழ்க்கையும் பகுத்தறிவும் போதும் என்றும் சிலர் எண்ணுவது பெருந் தவறு என்று காந்தியடிகள் உபதேசிக்கும் இந்த 'ரகுபதி ராகவ' கட்டுரைகளை வாரா வாரம் அனைவரும் படிக்க வேண்டும்.

பிறர் சொத்து எப்படியாவது தம் வசம் வரவேண்டும் என்று மோசமும், திருட்டும், அதருமமும் நாட்டு மக்களின் உள்ளங்களைத் தற்போது கவர்ந்து வருவதைக் காண்கிறோம். திருட்டு வழியில் சேர்த்த செல்வம் என்ன பயன் தரும்? நாம் விட்டுப் போகும் குழந்தைகள் அதை வைத்துக் கொண்டு என்ன சுகம் அடைய முடியும்? தேசம் முழுவதும் மோசமும் திருட்டும் பாபமும் சூழ்ந்து, கொடுங்கோல் ஆட்சி நடத்தும் சிலர் எல்லாச் சொத்துக்களையும் தங்களதாகவும் தங்கள் கட்சியின் பலத்துக்கு அநுகூலமாகவும் பயன்படுத்திக் கொள்வார்கள். அவ்வளவே. அழியாச் செல்வம் தெய்வ பக்தி ஒன்றே. அதுவே நம் மக்களைக் காக்கும். மோசத்தின் வழி அடைந்த செல்வம் ஒருவித நற்பயனும் தராது. ஔவையைப் போன்ற ஒரு மகாலக்ஷ்மி அவதாரம் நம் நாட்டில் திரும்பத் தோன்றி மக்களின் உள்ளங்களைக் கவர்ந்து எல்லாரையும் — ஆண் பெண் முதியோர் குழந்தைகள் எல்லாரையும் — அற வழியில் செல்லச் செய்தாலேதான் நம் நாட்டுக்கு விமோசனம் எதிர்பார்க்கலாம். பக்தியுடன் சிலரேனும் ஆண்டவனைப் பிரார்த்தித்தால் அந்த அவதாரத்தைப் பெறுவோம்; பெற்று உய்வடைவோம். ஏ.கே. செட்டியார் அவர்கள் என்பால் பக்தியும் அன்பும் கொண்டு நான் நாற்பது ஆண்டுகளுக்கு முன் ஆங்கிலத்தில் எழுதிய ஔவையார் பாட்டுக்களைத் தேடித் தொகுத்துப் பிரகசிக்கச் செய்ததைப் படித்தேன். அதன் பயனாக என் நம்பிக்கை புத்துயிர் அடைந்திருக்கிறது.

ஔவை அவதரித்த காலத்திலும் மக்களிடையில் துர்க் குணங்கள் இருந்தன. ஆத்திசூடி படித்தாலே இதைக் காணலாம். அவ்வாறே வள்ளுவர் காலத்திலும் மற்ற பெரியோர்கள் தோன்றிய காலத்திலும் மக்களிடையில் துர்க் குணங்கள் இருந்தன. ஆனபடியால் தற்காலத்திலும் சரஸ்வதி, பார்வதி, மகாலக்ஷ்மி மூவரும் கலந்த ஓர் அவதாரம், ஔவையைப்போல் மக்களுக்கு அறிவும் தூய உள்ளமும் பாக்கியமும் வளரச் செய்யும் ஓர் அவதாரம், ஏன் தோன்றக் கூடாது? தோன்றுவாள்.

ச. ராஜகோபாலாச்சாரி

# ராஜாஜியின் கருத்துக்கள்

சுதந்திரம் அடைந்த பிறகு செய்த மாபெரும் தவறு மொழி அடிப்படையில் மாநிலங்களைப் பிரித்ததே ஆகும். பாரத தேசம் எப்பொழுதுமே பல்வேறு பழக்க வழக்கங்கள், வாழ்க்கை வழிகள், வெவ்வேறு மதங்கள் சேர்ந்து வாழ்ந்து வந்த நாடு. முறை தவறிக் காரியங்கள் நடப்பதாக யாரும் நினைக்க இடம் இருந்ததே இல்லை. ராஜ்ய எல்லைப்புறப் பெரு நகரங்களிலும் பல்வேறு பண்டங்களை விற்று வாங்கும் பெரிய சந்தைகளிலும் பல்வேறு மொழியினர் சந்தித்துக் கலந்து பழகினர். மனிதாபிமானம் காரணமாக, சிரமமின்றி, இயற்கையான முறையில் ஒருவர் மொழியை ஒருவர் கற்றுக் கொள்ள முடிந்தது. கலப்பாக ஏற்பட்டுவந்த இந்த ஒருமைப்பாடு வளரும்படி விடாமல் துராசைகளைக் கிளப்பி விட்டோம். அவை ஒருமைப்பாட்டைத் தடை செய்தன. மொழி அடிப்படையில் பிரிந்து வாழ்வதிலும், தகராறிட்டுக் கொள்வதிலும் சுயநலக்காரர்களுக்கு அரசியல் லாபம் கிடைத்தது. அதிகார வேட்டையாளர் இந்த வேறுபாடுகளை முழு அளவில் பயன்படுத்திக் கொண்டனர்.

ஒருமைப்பாட்டை வளர்க்காமல், மொழிவழி மாநிலங்களாக யூனியனைப் பிரித்ததன் காரணமாக, எங்கு பார்த்தாலும் எல்லைத் தகராறுகளைக் காண்கிறோம். தீர்ந்து போனவை என்று கருதப்பட்டவைகூட மீண்டும் விவகார விஷயங்கள் ஆக்கப்படுகின்றன. இன்றையச் சூழ்நிலை வன்செயல்மயமாகிவிட்டது.

நாட்டை ஆண்டு, சட்டத்தையும் காத்து நல்லெண்ணத்தை வளர்க்க வேண்டிய பொறுப்புள்ளவர்கள் கண்மூடிகளாக இருந்து வருகிறார்கள். மொழிவழிப் பிரச்னை விரும்பத்தகாத விளைவுள்ளதாகி விட்டது. இதைப் பாரபட்சமற்ற எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் ஏற்கெனவே நடந்து முடிந்துவிட்டதை மாற்ற இயலாத நிலைமை வந்துவிட்டது. எனினும் தேசம் சிதறுண்டு போகின்ற நிலவரத்தைச் சமாளித்தாக வேண்டும். தீர யோசித்து, நல்ல பரிகாரங்களை உருவாக்கி, இந்தப் போக்கை மாற்ற வேண்டும். மீண்டும் மாநிலங்களை இணைப்பதற்கு மிக ஜாக்கிரதையாக ஒரு திட்டத்தை உருவாக்க வேண்டும். ஒன்றுபடுவதற்கான தோதுகளையும் ஆசைகளையும் வளர்க்க வேண்டும். அடுத்தடுத்துள்ள ராஜ்யங்களின் அதிகாரிகளை ஒரே அமைப்பினராக இணைக்கலாம். அடுத்தடுத்து உள்ள ராஜ்யங்கள், சில இலாகாக்கள் விஷயத்திலாவது ஒரே ராஜ்யம் போலச் செயலாற்றுவதற்கு வழி காண வேண்டும்.

குற்றம் இழைக்கும் கூட்டங்கள் மொழி பேதம் பாராட்டுவதில்லை. குற்றவாளிகளைக் கண்டுபிடித்துக் கைது செய்யும் போலீஸ் துறை அகில இந்திய அடிப்படையில் பணியாற்றுவதாகத்தான் இருக்க வேண்டும். மாநில சுயாட்சி ஏற்படுத்தும் தடை மதில்கள் காரணமாகக் குற்றவாளிகள் தப்பி விடுகிறார்கள், தண்டனை பெறுவதில்லை. எங்கு விளைந்தாலும் உணவு தானியங்கள் மொழி வேறுபாடில்லாமல் இந்தியா வெங்கும் கொண்டு செல்லக் கூடியதாக இருக்கவேண்டும். முன்னேற்றத்துக்கும், தொழில் வளர்ச்சிக்கும் தேவைப்படும் அடிப்படை வசதிகள் தேசம் முழுவதற்கும் ஒரே தலைமையின் பொறுப்பாக இருக்க வேண்டும். இவ்வாறே தேசத்தின் பாதுகாப்புப் பொறுப்பைப் பகிர்ந்துகொள்ள முடியாது. இதை விளக்கத் தேவையில்லை. இவற்றையும் வேறுசில விஷயங்களையும் ஒழுங்காகப் பரிசீலிக்க வேண்டும்.

பழுது பார்க்கும் வேலை எப்போதுமே கஷ்டமானதுதான். ஆனால் இது அவசியமான வேலை. சுயநலவாதிகள் சீர்திருத்தங்களை எப்போதும் எதிர்ப்பர். நான் இப்போது எந்தத் திட்டத்தையும் சமர்ப்பிக்கவில்லை. ஆனால் சிந்தனையாளர் இதைப் பற்றி ஆலோசிக்க வேண்டும் என்பது என் அவா. தவறான கொள்கைகளின் விளைவாகத் தேசம் சின்னாபின்னப்பட்டு வரும் போக்கை மாற்றி மீண்டும் ஒருங்கு இணைப்பது எப்படி என்று ஆராயுமாறு அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். இது நல்ல யோசனை, செயல்படக் கூடியது என்று கருதப்படுமாயின், பொது விவகாரங்களில் தேர்ச்சி பெற்ற அநுபவசாலிகளைக் கொண்ட ஒரு குழுவை அமைக்கலாம். இந்தியா அனைத்துக்குமான நல்லாட்சியை மீண்டும் ஏற்படுத்துவதற்கு அக்குழு ஒரு திட்டத்தைத் தயாரிக்கலாம்.

'ஒவ்வொரு மாநிலமும் சுயாட்சி பெற்றதாக இருக்க வேண்டும்; மாநிலங்களின் பிரதிநிதிகள் கொண்டதாக மத்திய அரசு அமைய வேண்டும்' என்ற கோரிக்கை, மொழிவழி அமைப்புத் திட்டத்தின் இயற்கையான விளைவே. சில சர்க்கார்கள் தமது கட்சிக் கூட்டங்களில் இதைப் பிரேரணையாகக் கொண்டு வந்துள்ளனர். இதன்படி நடந்தால் மத்திய அரசு அபாயகரமான வகையில் பலமற்றதாக ஆகிவிடும். இம்மாதிரி நடப்பதைக் கம்யூனிஸ்டுகள் வரவேற்பர். இந்தப் புதிய விஷயத்தை இங்கு நான் ஆராயவில்லை. தேசம்

சிதறுண்டு போகாமல் தவிர்ப்பது எப்படி என்பதே இங்கு விஷயம். தேசம் சின்னா பின்னப் படும் போக்கு நீடிக்குமானால் மத்திய அரசு ஸ்திரமற்றதாகவும், சக்தியற்றதாகவும் ஆகி விடும். இந்தியாவின் பகைவர்களுக்கு நமது தேசம் எளிதான இலக்காகிவிடும்.

★

செலவு உயர்ந்தால், வரி உயரத்தான் செய்யும். துண்டு விழும் பட்ஜெட்களைச் சரிக்கட்ட அதிகப்படியாக நோட்டுகளை அச்சடித்தாக வேண்டும். மக்களின் புகழ்ச்சியைப் பெறவும், மாநில சர்க்கார்களையும் தமது கட்சியையும் திருப்தி செய்விக்கவும், அவற்றின் மூலம் தமது ஆட்சியைச் சாசுவதமாக்கிக் கொள்ளவும் பிரதம மந்திரி விரும்புகிறார். செலவு உயர்வதற்கு இதுதான் காரணம். பட்ஜெட் பற்றாக்குறைகளும், அவற்றைச் சமாளிக்க நோட்டுகளை அச்சிட்டு வழங்குவதும் எங்கே கொண்டு போய் விடும் என்பது எல்லோரும் அறிந்ததே. இவற்றால் ரூபாயின் பண்டமாற்று மதிப்பு குறைந்து விடுகின்றது. எல்லா வகை மக்களின் வாழ்க்கைச் செலவும் உயர்ந்து கொண்டே போகிறது. தொழிலாளரின் அநுபவமும் இதுதான். பண வீக்கம், அதிகச் செலவு, அதிக வரி என்று வளைய வளைய வந்து கொண்டிருக்கும் நிலைமை நிலைத்து விடுகிறது.

தொழிலதிபர்களை மேலும் கசக்கிப் பிழிய முடியாது என்ற நிலைமை வந்து விட்டது. எனவே, வரிப் பளுவையும், ரூபாயின் மதிப்பிழப்பால் ஏற்படுகின்ற சிரமத்தையும் ஏழைகள்தான் தாங்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. தொழில்கள் விரிவு காண முடியாதபடி உருவாகின்ற குறுக்கீடுகளால் விழுமுதல் செய்கின்ற தொழில் நிருவாகிகள் அவ்வளவாகப் பாதிக்கப் படுவதில்லை. இதனால் வேலைவாய்ப்பு குறைந்து, ஏழைகள் தான் பாதிக்கப்படுகிறார்கள். முழு அளவில் வேலை வாய்ப்புக் கிடைக்கச் செய்வதுதான் நமது பிரதான நோக்கம். தொழில் வளர்ச்சிக்காகவும், நல்ல ஊதியங்களுக்காகவும் உழைத்தாக வேண்டியது முதற் கடமையாகிறது. வரிகளை உயர்த்துவது, இதற்கு நேர் எதிரான விளைவையே தரும்.

★

சென்ற வாரம், தமது 93-வது பிராயத்தில் காலமான கேரள சிம்மமாகிய மன்னத் பத்மநாபன் மலையாளிகளின் உணர்ச்சிகளை ஆண்டவர்; அரசாட்சியின் அதிகார பலம் ஏதும் இன்றியே தமக்கெனப் போட்டியில்லாத ஆளுகைச் சக்தி பெற்றவர்களுக்கு அவர் ஒரு ஜொலிக்கும் உதாரணம். நன்னடத்தை, அகப் பொலிவு இவையே அவரது சக்தியின் அடிப்படை.

கேரள அரசியல்வாதிகள் இன்று எவ்வளவு தீவிரமாக வேலை செய்தாலும், மன்னத் பத்மநாபனின் மறைவால் அந்த ராஜ்யம் அநாதையாகி விட்டது. காந்திஜிக்கு அகச் சிறப்பு ஊட்டி அவருக்குப் பெரும் சக்தி அளித்தது ஆன்மிக பலமே ஆகும். அவ்வாறே மன்னத்திடமும் ஆன்ம அக்னி ஒளி வீசியது; அதன் உள்ளிருந்து அவரது தீரம் தோன்றியது.

கேரளத்தையும், பாரதம் முழுவதையும் முழு மனத்துடன் நேசித்து, நாட்டுக்கே ஆதரிசமாக விளங்கிய மகா பலசாலி மறைந்து விட்டார். கேரள மக்களின் தகுதிக்கு ஏற்றபடி அங்கு ஒழுங்கான ஆட்சி அமையுமாயின் அதுவே பெரியாரான மன்னத் பத்மநாபனுக்கு உகந்த ஞாபகார்த்தமாகும்.

# பொன்னியின் செல்வன்

முப்பதாம் அத்தியாயம்

## இரு சிறைகள்

அமரர் கல்கி

**வா**னதியை விட்டுப் பிரிந்ததும் அரசிளங்குமரி நேரே பழையாறைச் சிறைச்சாலைக்குச் சென்றாள். காவலர்களை வெளியிலேயே நிறுத்திவிட்டுத் தான் மட்டும் வந்தியத்தேவன் அடைபட்டிருந்த இடத்துக்குப் போனாள். அவன் தனி அறையில் பூட்டப்பட்டிருந்தான். சிறையின் உச்சி மோட்டைப் பார்த்துக் கொண்டு உற்சாகமாகத் தெம்மாங்கு பாடிக் கொண்டிருந்தான்.

**"வானச் சுடர்கள் எல்லாம்**
**மானே உந்தனைக் கண்டு**
**மேனி சிலிர்க்குதடி —**
**மெய்மறந்து நிற்குதடி!"**

குந்தவை அருகில் வந்து நின்று தொண்டையைக் கனைத்த பிறகுதான் அவளைத் திரும்பிப் பார்த்தான். உடனே எழுந்து நின்று, "வருக! வருக! இளவரசியே! வருக! ஆசனத்தில் அமருக!" என்று உபசரித்தான்.

"எந்த ஆசனத்தில் அமரட்டும்?" என்று இளவரசி கேட்டாள்.

"இது தங்கள் அரண்மனை. இங்கு நடப்பது தங்கள் ஆட்சி; தங்கள் ஆணை; இங்குள்ள சிம்மாசனம் எதில் வேண்டுமானாலும் தங்கள் விருப்பம் போல் அமரலாம்!" என்றான் வல்லவரையன்.

"ஐயா! உமது முன்னோர்கள் ஆணை செலுத்தி மூவுலகையும் ஆண்டபோது வல்லத்து அரண்மனை இவ்விதம்தான் இருந்தது போலும். எங்கள் நகரில் இந்த இடத்தைச் சிறைச்சாலை என்று சொல்லுவார்கள்" என்றாள் இளவரசி.

"அம்மணி! எங்கள் ஊரில் இப்போது அரண்மனையும் இல்லை; சிறைச்சாலையும் இல்லை. பல தேசத்து அரசர்களுமாகச் சேர்ந்து அரண்மனை, சிறைச்சாலை எல்லாவற்றையும் இடித்துத் தரை மட்டமாக்கி விட்டார்கள். நூறு வருஷங்களுக்கு முன்பு!...."

"ஏன்? ஏன்? வல்லத்து அரண்மனை மீதும் சிறையின் பேரிலும் அவர்களுக்கு என்ன அவ்வளவு கோபம்?"

"எல்லாம் ஒரு கவிஞரால் வந்த வினை!"

"ஆ! அது எப்படி?"

"என் குலத்து முன்னோர்கள் தென்னாட்டின் பேரரசர்களாக அரசு புரிந்த நாளில், காலா காலத்தில் கப்பம் செலுத்தாத அரசர்களை அதிகாரிகள் சிறைப்படுத்திக்கொண்டு வருவார்கள். அரண்மனை முற்றத்தின் இரு புறத்திலும் அந்த அரசர்களை அடைத்து வைக்கும் சிறைகள் இருந்தன. சக்கரவர்த்தி கருணை புரிந்து எப்போது தங்களை வரும்படி சொல்லி

அனுப்புவார், மன்னிப்புக் கேட்டுக் கொண்டு ஊருக்குத் திரும்பலாம் என்று அந்தச் சிற்றரசர்கள் காத்திருப்பார்கள். பேரரசரைக் காணும் பேறு அவர்களுக்கு எளிதிலே கிட்டாது. அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே கவிஞர்களும் புலவர்களும் சக்கரவர்த்தியின் ஆஸ்தான மண்டபத்துக்குள் போவார்கள். சக்கரவர்த்தி முன்னிலையில் பாடல்களைச் சொல்லிப் பரிசுகள் பெற்றுக்கொண்டு திரும்பிச் செல்வார்கள். அப்போது, சிறையில் காத்திருக்கும் சிற்றரசர்கள் 'அடடா! இந்தப் புலவர்களுக்கு வந்த யோகத்தைப் பார்! இவர்கள் கொண்டு போகும் பரிசுகளைப் பார்!' என்று சொல்லி வியப்பார்கள். 'ஓகோ! இந்தப் புலவன் கொண்டு போவது என் வெண்கொற்றக் குடையல்லவா?' என்பான் ஒரு அரசன். 'அடடா! இந்தக் கவிஞன் என் சிவிகையில் அமர்ந்து போகிறானே!' என்பான் இன்னொரு வேந்தன். 'ஐயோ! என் பட்டத்து யானையை இவன் கொண்டு போகிறானே!' என்பான் இன்னொரு மன்னன். 'இது என் குதிரை! இந்தக் கவிராயனை என் குதிரை கட்டாயம் ஒரு நாள் கீழே தள்ளிவிடும்!' என்று சொல்லி மகிழ்வான் வேறொரு சிற்றரசன். எல்லாப் புலவர்களுக்கும் கடைசியில் இன்னொரு புலவர் வந்தார். அவர் சிறையிலிருந்த சிற்றரசர்கள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டார். கேட்டுக்கொண்டே சக்கரவர்த்தியின் சந்நிதானத்துக்குச் சென்று இந்தப் பாடலைச் சொன்னார்:

'என்கவிகை என்சிவிகை
    என்கவசம் என்துவசம்
என்கரியீது என்பரியீது
    என்பரால் — பன்கவள
மாவேந்தன் வாணன்
    வரிசைப் பரிசு பெற்ற
பாவேந்தரை வேந்தர்
    பார்த்து!'

''இவ்விதம் அந்தப் புலவர் பாடிய பாடல் தமிழ் நாடெங்கும் அப்பாலும் பரவி விட்டது. மக்கள் அடிக்கடி பாடியும் கேட்டும் மகிழ்ந்தார்கள். இதனால் எங்கள் இராஜ்யத்துக்கே ஆபத்து வந்து விட்டது. எல்லா அரசர்களுமாகச் சேர்ந்து வந்து படையெடுத்து எங்கள் ஊரையும், அரண்மனையையும், சிறைச்சாலையையும் எல்லாவற்றையும் அழித்து விட்டார்கள்...''

''எல்லாவற்றையும் அழித்தாலும் அந்தக் கவியின் பாடலை அழிக்க முடியவில்லையல்லவா? உங்கள் குலம் பாக்கியம் செய்த குலம்தான்! அதன் புகழ் என்றும் நிலைத்து நிற்கும்!''

''வாணர் குலத்தின் வீரப் புகழைக் கெடுக்க நான் ஒருவன் இப்போது ஏற்பட்டிருக்கிறேன்...''

''ஆகா! அந்த உண்மையை நீரே ஒப்புக்கொள்கிறீர் அன்றோ?''

'' ஒப்புக் கொள்ளாமல் வேறு என்ன செய்வது !



அடிமைத்தனங்களுக்குள்ளே பெண்ணடிமை மிகப் பொல்லாதது. ஒரு பெண்மணியின் வார்த்தையைக் கேட்கப் போய், என் முன்னோர்களின் குலப் புகழுக்கு நான் மாசு தேடிக்கொள்ள நேர்ந்தது. ஓடி ஒளிந்து மறைந்து திரிந்து உயிர் வாழ நேர்ந்தது. என் கோபத்தையெல்லாம் அந்த வைத்தியர் மகனைக் கொன்று தீர்த்துக் கொள்ளலாம் என்று பார்த்தேன். அதற்கும் ஒரு தடை வந்து குறுக்கிட்டு விட்டது...''

''ஐயா! வைத்தியர் மகன் பினாகபாணி மீது உமக்கு ஏன் அவ்வளவு கோபம்?''

''கோபத்துக்கு வேண்டிய காரணம் இருக்கிறது. நல்ல ஆளைப் பிடித்து என்னோடு கோடிக்கரைக்கு அனுப்பினீர்கள். அவன் என் காரியத்தையே கெடுத்துவிட இருந்தான். அது போகிறதென்றால், சற்றுமுன் இந்த ஊர் வீதியில் அவன் என்னைப் பகைவர்களின் ஒற்றன் என்று சொல்லிப் பழுவேட்டரையர்களிடம் பிடித்துக் கொடுக்கப் பார்த்தான். அங்கிருந்து தப்பி வந்தால், அ ர ண் ம னை முற்றத்தில் ஆயிரம் பேருக்கு எதிரில் என்னைப் 'பழுவூர் ராணியின் ஒற்றன்' என்று அவன் குற்றம் சாட்டினான்....''

''வல்லத்து இளவரசரே! அது உண்மை அல்லவா?''

''எது உண்மை அல்லவா?''

''நீர் பழுவூர் ராணி நந்தினி தேவியின் ஒற்றன் என்று பினாகபாணி குற்றம் சாட்டியதைக் கேட்கிறேன். உண்மையைச் சொல்வீரா?''

'' நான் உண்மை சொல்வதில்லை என்று விரதம் வைத்துக் கொண்டிருக்கிறேன் தேவி!''



''ஆகா! அது என்ன விரதம்? அரிச்சந்திர நதிக் கரையில் பழுவூர் ராணியைப் பார்த்ததிலிருந்து அப்படிப்பட்ட விரதம் எடுத்துக் கொண்டீரா?''

''இல்லை, இல்லை! அதற்கு முன்னாலேயே அந்த முடிவுக்கு வந்துவிட்டேன். நான் உண்மைக்கு மாறானதைச் சொல்லிக் கொண்டிருந்தவரையில் எல்லோரும் நம்பிக் கொண்டிருந்தார்கள். ஓர் இடத்தில் வாய் தவறி 'இளவரசர் நாகைப்பட்டினத்தில் பத்திரமாக இருக்கிறார்' என்று சொன்னேன். ஒருவரும் நம்பவில்லை. கேட்டவர்கள் எல்லாரும் சிரித்தார்கள்...''

''எவ்வளவு தவறான காரியத்தைச் செய்தீர்? உம்முடைய வார்த்தையை அவர்கள் நம்பாததே நல்லதாய்ப் போயிற்று; நம்பியிருந்தால் எவ்வளவு பிசகாகப் போயிருக்கும்?''

''இனிமேல் எப்போதும் இத்தகைய தவறுகள் நேரவே நேராது...''

''உமது வாக்குறுதிக்கு மிக்க நன்றி.''

''என்ன வாக்குறுதி கொடுத்தேன்?''

''இனிமேல் தவறு ஏதும் நேராமல் நான் இட்ட காரியத்தைச் செய்வதாக....''

''கடவுளே! அப்படி நான் ஒன்றும் வாக்குறுதி கொடுக்கவில்லை. போதும்! போதும்! என்னை இந்தச் சிறையிலிருந்து விடுதலை செய்து விடுங்கள்! என் வழியே போகிறேன்...''

''அப்படியானால் உமக்கு விடுதலை கிடையாது. இந்தச் சிறையிலேயே நீர் இருந்து வர வேண்டியதுதான்'' என்றாள்.

வந்தியத் தேவன் கலகலவென்று சிரித்தான்.

''நீர் எதற்காகச் சிரிக்கிறீர்? நான் சொல்லுவது வேடிக்கை என்றா?''

''இல்லை, தேவி! இந்தச் சிறையிலிருந்து தாங்கள் என்னை விடுதலை செய்யாவிட்டால், நான் இதிலிருந்து தப்பிச் செல்ல முடியாதா?''

இளவரசி ஒரு கணம் வந்தியத் தேவனைத் தன் மலர்ந்த கண்களால் உற்றுப் பார்த்துவிட்டு, ''ஐயா! நீர் கெட்டிக்காரர். அதிலும் சிறையிலிருந்து தப்பிச் செல்வதில் மிகக் கெட்டிக்காரர். பழுவேட்டரையரின் பொக்கிஷ நிலவறையிலிருந்து தப்பிச் சென்றவருக்கு இது ஒரு பிரமாதமா?'' என்றாள்.

''அப்படியானால் நீங்களே கதவைத் திறந்து என்னை விடுதலை செய்யுங்கள்.''

''நானே இந்தச் சிறையைத் திறந்து விடலாம், அல்லது நீரும் தப்பிச் செல்லலாம். ஆனால் இன்னொரு சிறைச்சாலையிலிருந்து நீர் தப்ப முடியாது...''

''சின்னப்பழுவேட்டரையரின் பாதாளச் சிறையைச் சொல்கிறீர்களா?''

''இல்லை; அதுவும் உமக்கு இலட்சியமில்லை. பாதாளச் சிறை வாசலில் காத்திருக்கும் புலிகளையும் வென்றுவிட்டுத் தப்பிச் சென்று விடுவீர்...''

''பின்னே, எந்தச் சிறையைச் சொல்கிறீர்கள்?''

''என்னுடைய இதயமாகிற சிறைச்சாலையைத்தான் சொல்கிறேன்.''

''தேவி! நான் வீடு வாசல் அற்ற அநாதை. என்னுடைய குலப் பெருமையெல்லாம் பழைய கதை; கவிஞர் கற்பனை. தாங்களோ மூன்று உலகையும் ஒரு குடை நிழலில் ஆளும் சக்கரவர்த்தியின் செல்வக் குமாரி...''

''யார் கண்டது? இந்தச் சோழ குலத்தின் பெருமையும் ஒரு நாள் பழைய கதை ஆகலாம்.''

''ஆயினும் இன்றைக்குத் தாங்கள் இந்நாட்டின் இணையற்ற அதிகாரம் படைத்தவர். சக்கரவர்த்தியும் பழுவேட்டரையர்களும் முதன் மந்திரியும் தங்கள் விருப்பத்துக்கு மாறாக நடக்கத் துணிய மாட்டார்கள்...''

''இதெல்லாம் உண்மையாயிருந்தால் நீர்மட்டும் எவ்விதம் என் அதிகாரத்தை மீற முடியும்?''

''அரசாங்க அதிகாரம் வேறு விஷயம். தாங்கள் நெஞ்சின் அதிகாரத்தையல்லவா குறிப்பிட்டீர்கள்?''

''அதிலேதான் என்ன தவறு...?''

''நம் இருவருக்கும் அந்தஸ்திலே உள்ள வித்தியாசம்தான் தவறு...''

'''அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்ற முதுமொழியைக் கேட்டதில்லையா?''

''அந்த முதுமொழி பொன்னியின் செல்வருக்கும் படகுக்காரி பூங்குழலிக்கும் கூடப் பொருந்துமல்லவா?''

''ஆம்; பொருந்தும்தான்! என் தம்பி உலகமாளப் பிறந்தவன் என்று நினைத்தேன். அதனால் அவர்களுடைய நெஞ்சுக்குத் தாழிட விரும்பினேன்...''

''நானும் இளவரசரைப் பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டு விட்டுத்தான் ஆவலுடன் வந்தேன். அவரோடு எட்டுத் திசைகளுக்கும் சென்று போர்க் களங்களில் வீரச் செயல்கள் புரிந்து பெயரும் புகழும் அடைய விரும்பினேன்.''

''இப்போது அந்த ஆசை போய் விட்டதல்லவா?''

''ஆம். பொன்னியின் செல்வர் அரசுரிமையைக் காட்டிலும் அமைதியான வாழ்க்கையை அதிகம் விரும்புகிறார். போர்க் களத்தில் வீர வானோத்தி விசுவதைக் காட்டிலும் ஆலயத் திருப்பணி

யில் கல்லுளி கொண்டு வேலை செய்வதற்கு அதிகம் ஆசைப்படுகிறார்...''

''மதுராந்தகனே இராஜ்யம் ஆளுவதில் தீவிர நோக்கம் கொண்டிருக்கிறான். ஆடு புலியாக மாறுகிறது; புலி ஆடாகிறது. ஆலவாய் இறைவன் நரியைப் பரியாக்கிப் பரியை நரியாக்கியதாகச் சிவபக்தரின் வரலாறு கூறுகிறது. அதுபோல்...''

''தேவி! தங்களுடைய கருணையினால் நானும் ஒரு நரியானேன். ஒளிந்தும் மறைந்தும் தந்திர மந்திரம் செய்தும் இல்லாதது பொல்லாததைச் சொல்லியும் பகைவர்களிடமிருந்து தப்பி வர வேண்டியதாயிற்று. அரசிளங்குமரி! இந்த வேலை இனி செய்ய என்னால் முடியாது! விடை கொடுங்கள்...''

''ஐயா! என் பிராண சிநேகிதி என்று எண்ணியிருந்த வானதி என்னைக் கைவிட்டுப் போகப் பார்க்கிறாள். நீருமா என்னைக் கைவிட்டுப் போய்விட எண்ணுகிறீர்?''

''தேவி! கொடும்பாளூர் இளவரசிக்கும் தங்களுக்கும் உள்ள விவகாரத்தைப் பற்றி நான் அறியேன். ஆனால் நான் எப்படித் தங்களைக் கைவிட முடியும்? இராஜாதி ராஜாக்கள் தங்களுடைய மணிப் பொற்கரத்தைக் கைப்பற்ற தவம் கிடக்கிறார்கள். நானோ குற்றேவல் செய்ய வந்தவன்...''

இளைய பிராட்டி அப்போது தன்னுடைய திருக் கரத்தை நீட்டினாள். இது கனவா, நனவா என்ற தயக்கத்துடன் வந்தியத்தேவன் அந்த மலர்க் கரத்தைத் தன் இரு கைகளாலும் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டான். அவனுடைய உள்ளமும் உடம்பும் பரவசமடைந்தன.

''வாணர் குலத்து வீரரே! கற்பென்னும் திண்மையைக் குலதனமாகப் பெற்ற பழந் தமிழ் மன்னர் வம்சத்தில் வந்தவள் நான். எங்கள் குலத்து மாதரில் சிலர் கணவனுடன் உடன் கட்டை ஏறியதுண்டு. பதியின் உடலை எரித்த தீயைக் குளிர்ந்த நிலவென்று அவர்கள் கருதி அக்கினியில் குதித்தார்கள்!''

''கேள்விப்பட்டிருக்கிறேன், தேவி!''

''உமது கரத்தைப் பற்றிய இந்த என் கரம் இன்னொரு ஆடவனுடைய கையை ஒருநாளும் பற்றாது...''

வல்லவரையன் சொல்லிழந்து செயலிழந்து குந்தவையின் கண்ணீர் ததும்

## கூடு விட்டுக் கூடு பாய......

பாடலைப் பாடவேண்டுமே ஒழிய வசனத்தைப் போல் வாசிக்கக்கூடாது. நாட்டியத்துக்கும் சாதாரண நடைக்கும் எவ்வளவு வித்தியாசமோ, அவ்வளவு வித்தியாசம் பாடலுக்கும் வசனத்துக்கும் இருக்கிறது.

பாடலை இதயம் ஒட்டிப் பாடும்போது நாமும் சிருஷ்டி தத்துவத்துக்கு உள்ளேயே போய் விடுகிறோம். அப்படிப் போனால்தான் கவிதை உணர்கிறோம் என்றாகும். ஏன், சிருஷ்டி கர்த்தாவாகவே ஆகிவிடுகிறோம். கலை உணர்ச்சி என்றாலே நாம் கூடு விட்டுக் கூடு பாய்கிறோம் என்றுதான் பொருள். — டி. கே. சி.




மிச்சம் இல்லை மிச்சம் இல்லை
  மிச்சம் என்பதில்லையே - பணம்

மச்சு வீட்டைக் காலி செய்து
  குச்சு வீடு மாறினும் - மிச்சம் இல்லை

குச்சு வீட்டில் குடியிருந்து
  கூழ் குடித்த போதினும் - மிச்சம் இல்லை

எச்சில் கையால் ஈ ஓட்டாத
  ஈனனாக மாறினும் - மிச்சம் இல்லை

பிச்சைக்காரன் குரலைக் கேட்டுப்
  பேயனாக மாறினும் - மிச்சம் இல்லை

பட்சணங்களை மறந்து
  பொட்டுக் கடலை கொறிக்கினும் -
  மிச்சம் இல்லை

பிக்சருக்குப் போகாமலே
  பீச்சுக்கேதான் போயினும் - மிச்சம் இல்லை

கச்சையை வரிந்து கட்டி
  கூட வேலை செய்யினும் . மிச்சம் இல்லை

இச்சைகளைக் கொன்றுவிட்டு
  யோகியைப்போல் வாழினும் - மிச்சம்இல்லை

"இதய மலர்கள்" என்ற நூலிலிருந்து· பிரசுரம்: அழகன் பதிப்பகம், 18, நடராஜபுரம் தெரு, மதுரை: விலை: ரூ. 4-50.

பிய கண்களைப் பார்த்த வண்ணம் மதியும் இழந்து நின்றான்.

''ஐயா! உம்முடைய பதற்றமான காரியங்களினால் உமது உயிருக்கே ஏதேனும் அபாயம் நேர்ந்தால் என்னுடைய கதி என்ன ஆகும் என்பதைச் சிறிது எண்ணிப் பாரும்.''

''தேவி! தங்களுடைய இதய சிங்காதனத்தில் இடம் பெற்ற இந்தப் பாக்கியசாலி உயிருக்குப் பயந்த கோழையா யிருக்க முடியுமா?''

''கோழைத்தனம் வேறு; ஜாக்கிரதை வேறு. ஐயா! முதன் மந்திரி அநிருத்தருக்குக் கூடத் தங்கள் வீரத்தைப் பற்றி ஐயம் கிடையாது.''

''பின்னர் எதைப் பற்றி அவர் ஐயப்படுகிறார்?''

''நீர் பழுவூர் ராணியின் ஒற்றனாயிருக்கலாம் என்று ஐயுறுகிறார்.''

''அப்படியானால் வைத்தியர் மகன் பினாகபாணிக்கு அளித்த மறுமொழியை அவருக்கும் அளிக்கச் சித்தமா யிருக்கிறேன்; சிறைக் கதவைத் திறவுங்கள்; அந்த மனிதர் எங்கே இருக்கிறார் என்று சொல்லுங்கள்.''

''வைத்தியர் மகனாவது மற்போரில் சிறிது பழக்கமுள்ளவன். அநிருத்தர் சொற்போர் அறிவாரே யன்றி மற்போர் அறியார். அறிவின் கூர்மையே அவருடைய ஆயுதம். வாளின் கூர்மையை அவர் என்றும் துணை கொண்டதில்லை...''

''அப்படியானால் என்னுடைய வாளின் கூர்மையைத்தான் முதன் முதலில் பரீட்சை பார்க்கட்டுமே?''

''ஐயா! இந்த நாட்டில் சக்கரவர்த்திக்கு அடுத்த மரியாதைக்குரியவர் முதன் மந்திரி அநிருத்தர். அவருடன் பகிரங்கமாக முரண்படப் பழுவேட்டரையர்களும் தயங்குகிறார்கள்...''

''பழுவேட்டரையர்கள் குற்றம் உள்ள நெஞ்சினர். அவர்கள் பயப்படுவார்கள். நான் ஏன் பயப்பட வேண்டும்?''

''இளம் பிராயத்தி லிருந்து என் தந்தையின் உற்ற தோழர் அவர். முதன் மந்திரிக்குச் செய்த அவமரியாதை சக்கரவர்த்திக்கும் எனக்கும் செய்த அவமரியாதையாகும்.''

''அப்படியானால் அவருடைய நம்பிக்கையை நான் பெறுவதற்கு வழியையேனும் சொல்லுங்கள்.''

''முதன் மந்திரி காஞ்சிக்கு மிகவும் நம்பிக்கையான ஒருவரை அனுப்ப விரும்புகிறார். உம்மை அனுப்பலாம், நம்பி அனுப்பலாம் என்று நான் அவருக்கு உறுதி அளித்திருக்கிறேன்.''

''தேவி! காஞ்சிக்கு என்னை அனுப்பாதீர்கள்! என் மனத்துக்குள் ஏதோ ஒரு குரல் 'காஞ்சிக்குப் போகாதே!' என்று சொல்லிக் கொண்டிருக்கிறது.''

''அது ஒரு வேளை பழுவூர் இளைய ராணியின் குரலா யிருக்கலாம் அல்லவா?''

''இல்லவே இல்லை! தங்களுடைய சொல்லுக்கு மாறாக அந்த விஷ நாகத்தின் குரலை நான் கேட்பேனா?''

''ஐயா! பழுவூர் இளையராணியைப் பற்றி இனி எந்த சமயத்திலும் அப்படியெல்லாம் பேசாதீர்கள்!''

''இது என்ன? ஏன் இந்தத் திடீர் மாறுதல்!''

''ஆம்; என் மனம் அவள் விஷயத்தில் அடியோடு மாறி விட்டது. நீர் இலங்கையிலிருந்து கொண்டு வந்த செய்தியைக் கேட்ட பிறகு.''

''அப்படியானால் இனி நான் பழுவூர் இளைய ராணியிடமும் பயபக்தியுடன் நடந்து கொள்ள வேண்டியதுதானா!''

''ஆம்!''

''அவள் பக்தியுடன் பூஜை செய்யும் கொலை வாளை என்னிடம் கொடுத்து 'இன்னாருடைய தலையைக் கொண்டுவா' என்று சொன்னாலும் கொண்டு வர வேண்டியதுதானா?''

குந்தவை தேவியின் உடம்பு நடுங்கிற்று. மறுமொழி கூறிய போது அவளுடைய குரலும் நடுங்கிற்று.

''பழுவூர் ராணியிடம் மரியாதையுடன் நடந்து கொள்ள வேண்டியது தான். ஆனால் அவள் பேச்சைக் கேட்க வேண்டிய அவசியமில்லை. அவள் எத்தகைய காரியத்தில் ஈடுபட்டிருக்கிறாள் என்பது அவளுக்கே தெரியாமல் இருக்கலாம் அல்லவா?''

''அப்படித்தான் அவளும் கூறினாள். 'நான் எதற்காக இந்தக் கத்தியைப் பூஜை செய்து கொண்டிருக்கிறேன் என்பது எனக்கே தெரிய வில்லை' என்றாள்.''

இதைக் கேட்ட இளவரசி இன்னும் அதிகமாக நடுங்கிய குரலில், ''இந்தச் சோழர் தொல்குடியைத் தெய்வந்தான் காப்பாற்ற வேண்டும்'' என்றாள்.

''காப்பாற்றுகிற தெய்வம் இந்த ஏழையைச் சாதனமாக வைத்துக் கொண்டு காப்பாற்றட்டும்'' என்றான் வந்தியத்தேவன்.

''ஐயா! நானும் அவ்வாறுதான் நம்பியிருக்கிறேன். நீர் காஞ்சியிலிருந்து திரும்பி வந்ததும் மறுபடியும் ஒரு தடவை இலங்கைக்குப் போகவேண்டும்



## நியூயார்க்கில் தியாகப்பிரும்ம ஆராதனை

நியூயார்க்கிலும் சுற்றுப்புறத்திலும் வாழ்ந்துவரும் கர்நாடக சங்கீத ரசிகர்கள் தியாகராஜரின் ஆராதனையை, பிப்ரவரி முதல் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். தியாகராஜரின் சங்கீத விழா இந்திய தூதராலய மாளிகையில், பாரதி சங்கத்தின் ஆதரவில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இந்த விழாவுக்கு ஐக்கிய நாடுகள் காரியாலயத்தின் உபதலைவரான ஸ்ரீ ஸி. வி. நரஸிம்மன் தலைமை வகித்தார். பாரதி சங்கத்தின் தலைவரான ஸ்ரீ ஏ. ஜெயராமன் ரசிகர்களையும் அங்கத்தினர்களையும் வரவேற்றுப் பேசினார். நிரம்பியிருந்த கலைமன்றத்தில் கூடியிருந்தவர்களில் பலர் ஐம்பது அல்லது நூறு மைல்களுக்கு அப்பாற்பட்ட இடங்களிலிருந்து வந்திருந்தனர். நிகழ்ச்சியின் இறுதியில் தென்னிந்திய பாணியில் விருந்தும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

ஸ்ரீமதி வி. ரங்கநாயகி திரு ஹெரால்ட் பவர்ஸ் ஆகியோர் பாடினார்கள். ஸ்ரீ கல்யாண கிருஷ்ண பாகவதர், குமாரி லக்ஷ்மி, திரு எட்வான் நெல் ஆகியோர் வீணை வாசித்தார்கள். ஸ்ரீ வி. தியாகராஜனும் திரு சங்கரும் பிடில் வாசித்தார்கள். மிருதங்கம் வாசித்தவர் ஸ்ரீ டி. ரங்கநாதன்.

நியூயார்க், 3–2–70 — ஏ. வி. ரகுநாத், பொக்கிஷதார், பாரதி சங்கம்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அந்த ஊமைத் தாயை எப்படியாவது இங்கே அழைத்து வரவேண்டும்....''

''அவளை அழைத்து வருவது சுழிக் காற்றைக் குடத்தில் அழைத்துக் கொண்டு வருவது போலத்தான். இப்படி ஒரு முறை யாரோ சொன்னார்கள். ஆம், அந்த வீர வைஷ்ணவன்தான். ஒருவேளை அவனே அழைத்து வந்திருக்கலாம்.''

''இல்லை; அவனால் அந்தக் காரியம் முடியவில்லை. உம்மாலேதான் அந்தக் காரியம் ஆகவேண்டும்.''

''அப்படியானால் என்னைக் காஞ்சிக்கு அனுப்பாதீர்கள், தேவி !''

'' ஏன் ?''

''அங்கே என் எஜமானர் இருக்கிறார். அவர் கேட்டால் நான் எல்லா விவரங்களையும் சொல்லித்தான் ஆகவேண்டும். பழுவேட்டரையர்களும் மற்றச் சிற்றரசர்களும் செய்யும் சதியைப் பற்றி அறிந்தால் உடனே வெகுண்டு எழுவார். சக்கரவர்த்தியைச் சிறை வைத்திருப்பது போல் வைத்திருக்கிறார்கள் என்று அறிந்தால் உடனே படையெடுத்துக் கிளம்புவார். பொன்னியின் செல்வரைப் பற்றிய செய்தி அவர் காதில் எட்டியிருந்தால் இதற்குள்ளேயே ஒருவேளை புறப்பட்டிருந்தாலும் புறப்பட்டிருப்பார்....''

"அதற்காகவேதான் உம்மை அனுப்ப விரும்புகிறேன். அவர் காஞ்சியை விட்டுப் புறப்படாமல் எப்படியாவது தடுத்துவிட வேண்டும்."

"நான் காஞ்சியை அடைவதற்குள் அவர் புறப்பட்டிருந்தால்?...."

"வழியில் அவர் எங்கே இருந்தாலும் அங்கே போய்ச் சேர்ந்து கொள்ளுங்கள். எல்லாவற்றையும்விட முக்கியமாக நீர் அவசியம் செய்ய வேண்டிய காரியம் ஒன்று இருக்கிறது...."

"சொல்லுங்கள்!"

"பெரிய பழுவேட்டரையர் இளைய ராணியுடன் கடம்பூர் மாளிகைக்குப் புறப்பட்டு விட்டார் என்ற செய்தி கிடைத்திருக்கிறது....."

"உண்மையில் இளைய ராணிதான் போகிறாளா? அல்லது இளைய ராணியின் பல்லக்கில்..."

"இல்லை; இளையராணிதான் போகிறாள். என் சித்தப்பாதான் இன்னும் இங்கே இருக்கிறாரே?"

"எதற்காகப் போகிறார்களாம்?"

"ஆதித்த கரிகாலனையும் கடம்பூருக்கு வரும்படி அழைத்திருக்கிறார்கள். கலியாணப் பேச்சு என்பது வெளிப்படையான காரணம். இராஜ்யத்தை இரண்டாகப் பிரித்துக் கொடுத்துச் சமாதானம் செய்து வைக்கப் போவதாகவும் ஒரு பேச்சு நடந்து வருகிறது."

"என் எஜமானர் அதற்கு ஒரு நாளும் சம்மதிக்க மாட்டார்."

"அதைப் பற்றியெல்லாம் இப்போது எனக்குக் கவலை இல்லை."

"பின்னே, என்ன கவலை தேவி!"

"இன்னதென்று சொல்ல முடியாத பயம் என் மனத்தில் குடிகொண்டிருக்கிறது. நெஞ்சு 'திக், திக்' என்று அடித்துக் கொள்கிறது. அரைத் தூக்கத்தில் விவரமில்லாத பயங்கரங்கள் என்னைச் சூழ்ந்து கொள்கின்றன. நல்ல தூக்கத்தில் அகோரமான கனவுகள் கண்டு விழித்துக் கொள்கிறேன். அப்புறம் வெகுநேரம் வரையில் என் உடம்பு நடுங்கிக் கொண்டிருக்கிறது."

"இந்த நிலையில் தங்களைப் பிரிந்து என்னை ஏன் போகச் சொல்கிறீர்கள்? தங்களுக்கு எத்தகைய அபாயம் வந்தாலும் என் உயிரைக் கொடுத்து...."

"ஐயா! என்னுடைய பயம் என்னைப் பற்றியதே அன்று. என் தமையனைப் பற்றியது; பழுவூர் இராணியைப் பற்றியது. அவர்கள் சந்தித்தால் என்ன நேரிடுமோ என்று எண்ணி என் உள்ளம் கலங்குகிறது. அவர்கள் தனியாகச் சந்திக்க முடியாதபடி நீர் தடை செய்ய வேண்டும்...."

"தேவி! அவர் ஒன்று செய்வதற்கு நினைத்தால் அதை யார் தடுக்க முடியும்?"

"ஐயா! என் தமையனைக் காப்பாற்றும் இரும்புக் கவசம் போல் நீர் உதவ வேண்டும். அவசியமானால் நந்தினி யார் என்பதை என் சகோதரனிடம் சொல்லி விட வேண்டும்...."

"அதை அவர் நம்ப வேண்டுமே?"

"நம்பும்படியாகச் செய்வது உமது பொறுப்பு. எப்படிச் செய்வீர் என்று எனக்குத் தெரியாது. அவர்களை எப்படியேனும் சந்திக்க முடியாதபடி செய்தால் மிக்க நலமாயிருக்கும்."

"தேவி! என்னால் இயன்ற முயற்சிகளைச் செய்து பார்க்கிறேன். தோல்வி அடைந்தால் என்னைக் குற்றம் சொல்ல வேண்டாம்" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! தாங்கள் தோல்வி அடைந்தாலும் வெற்றி அடைந்தாலும் என் இதயச் சிறையிலிருந்து இந்த ஜன்மத்தில் தங்களுக்கு விடுதலை கிடையாது!" என்றாள் அரசிளங்குமரி. (தொடரும்)

---



"எதற்காகப் பையனைக் கோவிச்சுக்கிறீங்க? பரீட்சையில்லாமலே பாஸ் போடுற நாள் சீக்கிரமே வரத்தான் போகுது!"

□

"போன தடவை லைசென்ஸ் எடுக்க நான் வந்தபோது வயது இருபதுன்னு சொன்னீங்க; இப்போது 16 என்கிறீங்களே?"

"முன்னே நான் எக்ஸ்ட்ரா நடிகை. இப்போ கதாநாயகியாச்சே!"





உகந்த சூழ்நிலையை தேர்ந்தெடுங்கள்-உங்கள் உடைமையாக்கிவிடும் அது.

# ORWO FILMS

வாழ்க்கையில் நிகழும் மறக்கமுடியாத சம்பவங்களை உங்களுடைய காமிராவில் ஆர்வோ பிலிம் கொண்டு படம் பிடியுங்கள். அதன் நுண்ணிய அமைப்பும், பளபளப்பற்றத் தன்மையும், அதி நுட்பத்தை அளித்து, காட்சியை விரிவுப்படுத்தி, சீரான ஒளிப்பதிவிற்கு வகை செய்கிறது.

---

விநியோகஸ்தர்கள் : ஆர்வோ பிலிம்ஸ் ஈஸ்டர்ன் யூனிட், சென்னை மற்றும் கல்கத்தா.
ஆர்வோ பிரைவேட் லிமிடெட், பம்பாய் மற்றும் டெல்லி.

தயாரிப்பாளர் : வெப் பிலிம்பேப்ரிக் உல்ப்பன், ஜெர்மன் டெமோக்ரேடிக் ரிபப்ளிக்.

JAISONS

# ராமாயணம்

## ராஜாஜி

**வி**ளையாடியது இனிப் போதும் என்று சூர்ப்பனகையைப் பார்த்து, ''நங்காய், இனி நிறுத்து. என் தம்பி இருக்கிறான். உன் விஷயம் அவனுக்குத் தெரிந்து விட்டால் அவன் கோபித்துக் கொல்வான். அவன் பெருங் கோபக்காரன். என்ன நடக்குமோ எனக்குத் தெரியாது. சிக்கிரம் நீ வந்த வழியே திரும்பிப் போய்விடு!'' என்றான் ராமன்.

இதைச் சொல்லி ராமனும் சீதையும் பர்ணசாலைக்குள் போய் விட்டார்கள்.

இதன் பின் அரக்கிக்குக் காதல் வெறி அதிகமாகி விட்டது. இரவு எப்படியோ எங்கேயோ கழிக்கிறாள். விடிந்தவுடன் யோசனை செய்கிறாள்:

''இவனை அடையாவிட்டால் உயிர் போகும் போலிருக்கிறது. இந்தப் பெண் ஒருத்தி இருக்கும் வரையில் இவன் என்னைத் தீண்டப் போவதில்லை. இவளை நான் எப்படியாவது தூக்கிக் கொண்டு போய் ஒளித்து வைத்து, பிறகு இவனுடைய காதலைப் பெற வேண்டும்'' என்று தீர்மானித்து அதிகாலையில் ஆசிரமத்துக்குள் நுழைந்தாள். ராமன் தடாகத்தண்டை சந்தி உபாசனையிலிருந்தான். சீதை ஆசிரமத்தில் இருந்தாள்; தனியாக இருந்தாள். இவளைத் தூக்கிக்கொண்டு போக இது தான் சமயம் என்று எண்ணினாள். அண்டையில் சோலையில் லக்ஷ்மணன் இருப்பதைப் பார்க்கவில்லை.

வந்து நோக்கினள், வள்ளல்போய்
ஒருமணித் தடத்துச்
சந்தி நோக்கினன் இருந்தது
கண்டனள்; தம்பி
இந்து நோக்கிய நுதலியைக்
காத்(து) அயல் இருண்ட
கந்தம் நோக்கிய சோலையில்
இருந்தது காணுள்
தனியி ருந்தனள், சமைந்த(து)
என சிந்தனை தாழ்வுற்(று)
இனியி ருந்தெனக்(கு) எண்ணுவதுஇல்
என எண்ணுத்
துனியி ருந்தவல் மனத்தினள்
தோகையைத் தொடர்ந்தாள்;
கனியி ரும்பொழில் காத்தயல்
இருந்தவன் கண்டான்.

லக்ஷ்மணனுக்குச் சீதைமேல் யாரோ ஒருத்தி பாய்ந்ததாகத் தெரிந்தது.



"நில்!" என்று சத்தம் போட்டுப் பாய்ந்தான். மயிரைப்பிடித்து உதைத்து, வாள் உருவினான். அரக்கி தன்னுடைய பருத்த உருவத்தைக் கொண்டு லக்ஷ்மணனைத் தூக்கி ஆகாயத்தில் கிளம்பிப் போகப் பார்த்தாள். லக்ஷ்மணன் அவளை எளிதில் பிடித்துத் தள்ளி அங்கவீனம் செய்துவிட்டு, "துஷ்டை, ஜாக்கிரதை!" என்று எச்சரித்து, "போ" என்று துரத்தி விட்டான்.

சூர்ப்பனகை அப்போது தன் உண்மை உருவத்தோடு இரத்தப் பெருக்குடன் ஓடித் தன் இனத்தாரைப் பெயரிட்டுச் சொல்லிப் பலமாகப் புலம்பினாள்.

"உரம்நெறிந்து விழ, என்னை
உதைத்துருட்டி மூக்கரிந்த
நரன்இருந்து தோள் பார்க்க,
நான்கிடந்து புலம்புவதோ!
கரன் இருந்த வனம் அன்றோ:
இவைபடவும் கடவேனோ!
அரன் இருந்த மலை எடுத்த
அண்ணாவோ! அண்ணாவோ!"

"ஓ தம்பி கரனே, ஓ அண்ணா ராவணனே, ஓ இந்திரஜித்தே!"

"தானவரைக் கரு அறுத்துச்
சதமகனைத் தளையிட்டு,
வானவரைப் பணிகொண்ட
மருகாவோ! மருகாவோ!
கல்லீரும் படைத்தடக்கை
அடல்கரதூடணர்முதலா
அல்லீரும் சுடர்மணிப்பூண்
அரக்கர்குலத்(து) அவதரித்தீர்!
கொல்லீரும் படைக்குப்ப
கருணைப்போல் குவலயத்துள்
எல்லீரும் உறங்குதிரோ?
யான் அழைத்தல் கேளீரோ?"

என்று அரக்கிக்கு உள்ள பலமான தொண்டையைச் செலுத்திப் புலம்பினாள்.

* * *

இது கம்பருடைய சித்திரம். சூர்ப்பனகை ராக்ஷஸப் பிறப்பை மறைத்துக் கொண்டு ஓர் அழகிய பெண்ணுருவம் தரித்து, ராமனை வரித்தாள் என்பது கம்பருடைய கைவண்ணம். அதன் மேல் கவியின் சக்தி தன் பாட்டுக்கு வேலை செய்கிறது. வால்மீகி ராமாயணத்திலும் சூர்ப்பனகை, "காமரூபிணி" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது இஷ்டப்பட்ட வடிவத்தை எடுத்துக் கொள்ளும் சக்தி வாய்ந்தவள். ராமனைக் கண்டு மோகித்ததும் இந்தச் சக்தியைப் பயன்படுத்திக் கொண்டதும் இயற்கை நிகழ்ச்சியாகும்.

## 47. கரனும் ஒழிந்தான்!

ஜனஸ்தானத்திலிருந்து கரனுடைய பதினான்கு சேனைத் தலைவர்களையும் அழைத்துக் கொண்டு சூர்ப்பனகை ராமனுடைய ஆசிரமத்துக்கு வந்தாள். பழி வாங்கி ராஜகுமாரர்களைக்

கொன்று அவ்விடத்திலேயே அவர்கள் ரத்தத்தைக் குடிக்க வந்தாள்.

''அதோ அங்கே நிற்கிறார்களே அந்த இரு யுவர்களே என்னை அவமதித்து அங்கவீனம் செய்தது. அவர்களை உடனே கொல்லுங்கள்'' என்றாள்.

ராமன் விஷயத்தை அறிந்தான். உடனே லக்ஷ்மணனிடம், ''லக்ஷ்மணா! கொஞ்ச நேரம் சீதையைப் பார்த்துக் கொள். நான் இவர்களைப் பார்த்துக் கொள்ளுகிறேன்'' என்று சொல்லி விட்டு வில்லையெடுத்து நின்றான்.

யுத்த வழக்கத்தை அனுசரித்து எதிர்க்க வந்தவர்களைப் பார்த்துத் தான் இன்னான் என்று சொல்லி விட்டு, ''ஏன் எங்களைத் தொந்தரவு செய்ய வந்தீர்கள்? ரிஷிகளின் கட்டளைப்படி அரக்கர்களைத் தொலைக்கவே நாங்கள் இந்த வனத்தில் குடியிருக்கிறோம். உயிர் தப்பிப் போக விரும்பினால் சும்மா போங்கள்'' என்றான்.

அரக்கர்களும் வீரமாகப் பேசினார்கள். யுத்தம் ஆரம்பமாயிற்று. ராமனுடைய பாணங்கள் அரக்கர்களைக் கொல்ல அதிக நேரம் பிடிக்கவில்லை. அனைவரும் மாண்டார்கள்.

சூர்ப்பனகை மறுபடியும் கோரமாகப் புலம்பிக் கொண்டு கரனிடம் போய் அவன் முன்னிலையில் விழுந்தாள். விழுந்து புரண்டு கொண்டிருந்த சகோதரியைச் சமாதானப் படுத்தப் பார்த்தான் கரன். அவனுக்கு நிலைமை விளங்கவில்லை.

''யமனைப் போன்ற வீரர்களை அனுப்பினேன். இதற்குள் காரியம் முடிந்திருக்கும். ஏன் அழுகிறாய்? நான் இருக்க நீ இப்படி அழலாகாது'' என்றான்.

அவள் எழுந்து கண்களைத் துடைத்துக் கொண்டு சொன்னாள்:

''நீ பதினான்கு வீரர்களை அனுப்பினாய். உண்மையே. அவர்கள் பதினான்கு பேரும் பிணங்களாகக் கிடக்கிறார்கள். ராமனுடைய வீரத்தையும் அவன் அற்புத யுத்தத்தையும் உனக்கு நான் எப்படிச் சொல்லுவேன்? உன்னுடைய சேனாதிபதிகள் மாண்டார்கள். உனக்கு மானமிருந்தால் உடனே புறப்படு. ராமனோடு யுத்தம் செய்து ராக்ஷச குலத்தைக் காப்பாற்று. இல்லாவிட்டால் அழிந்தோம் என்பது நிச்சயம். உனக்கு ரோஷம் இருக்குமேல் புறப்பட்டு வா. ராமனை எதிர்த்து யுத்தம் செய். பயமாக இருந்தால் சொல். நீ உன்னையே சூரன் என்று சொல்லிக் கொண்டிருப்பதில் பயனில்லை. சூரனாக இருந்தால் ராமனை எதிர்த்துப் போர் செய். உன்னுடைய ராஜ்யத்துக்குள் புகுந்திருக்கும் இந்த யுவர்கள் உன் குலத்தை அழித்துத் தீர்க்க நிச்சயித்திருக்கிறார்கள்;'' என்றாள்.

தன் சபையிலேயே இவ்விதம் சகோதரி தன்னை அவமானப்படுத்திப் பேசிய மொழிகள் கரன் உள்ளத்தில் சூலம் போல் பாய்ந்தன.

''இந்த அற்பனைக் கண்டு நீ இவ்வளவு பயந்து பேசுகிறாய். இன்னும் ஒரு கணம் காத்திரு. அவன் ரத்தத்தை நீ குடிப்பாய்!'' என்று கரன் எழுந்தான்.

''நீ ஒருவனாகப் போகாதே. சேனையைத் திரட்டிக் கொண்டு போ!'' என்றாள்.

அப்படியே கரனும் உத்தரவிட்டான். சகலவித ஆயுதங்களும் கொண்ட பெரிய சேனை தூஷணன் தலைமையில் முன்னால் சென்றது. பின்னால் கரனும் மெதுவாகத் தேரில் சென்றான். போகும் போது அரக்கன் அபசகுனங்களைக் கண்டான். அவன் சிரித்து விட்டு, ''துர்நிமித்தங்களைக் கவனிக்காதீர்கள். நான் இதுவரை எந்த யுத்தத்திலும் தோற்றதில்லை. துஷ்டர்களாகிய இந்த அற்ப மானிடப் பூச்சிகளை நசுக்கிவிட்டு வெகு சீக்கிரத்தில் திரும்புவோம்'' என்று தன் சேனைக்குக் கர்ஜித்துச் சொன்னான். துர்நிமித்தங்களால் கொஞ்சம் பயமடைந்த அந்தச் சேனையும் மறுபடியும் உற்சாகமடைந்து சென்றது.

* * *

சேனை வரும் ஓசையைக் கேட்ட ராம லக்ஷ்மணர்களும் யுத்தத்துக்குத் தயாரானார்கள்.

''லக்ஷ்மணா! நிமித்தங்களைப் பார்த்தாயா? யுத்தம் வரும் என்பது நிச்சயம். ஜன ஸ்தானத்து ராக்ஷஸர்கள் அழிந்து போவது நிச்சயம். நீ ஆயுதங்களும் கவசமும் தரித்து சீதையை அழைத்துப் போய்த் தகுந்த ஒரு மலைக் குகையில் ஜாக்கிரதையாக இருப்பாய். நான் இங்கே நின்று இந்த ராக்ஷஸ சேனையைப் பார்த்துக் கொள்ளுகிறேன். தாமதிக்க வேண்டாம். எனக்குத் துணை வேண்டியதில்லை'' என்று தம்பிக்குச் சொல்லி விட்டு ராமன் கவசம் பூண்டு ஆயுத பாணியானான்.

லக்ஷ்மணன் ராமன் சொன்ன வண்ணம் சீதையை அழைத்துக் கொண்டு மலைக்குச் சென்று விட்டான்.

ஆகாயத்தில் தேவர்களும் கந்தர்வ சித்த சாரண கணங்களும் யுத்தத்தைப் பார்க்க வந்து விட்டார்கள். ராமனுடைய விஜயத்தை விரும்பி அவர்களும் சுவஸ்தி சொன்னார்கள். (தொடரும்)





# உயர்நோக்கு மாணவர்கள்

"இங்கேதான் சார் நீல் ஆர்ம்ஸ்ட்ராங் முதன் முதலாகத் தம் பாதத்தைப் பதித்தார். அதோ! அதோ! அந்த ஓரத்தில்தான்" என்றார் உற்சாகத்துடன் அந்த நண்பர். என் பார்வையில் பக்கத்து வீட்டுப் பரந்த சுவர் போல் சந்திர மண்டலப் பரப்பு விரிந்து கிடந்தது! மேடு பள்ளங்களும்கூடத் தெளிவாக இருந்தன!

"சார்! சனி கோளத்தையும் (Saturn) நீங்கள் அவசியம் பார்க்க வேண்டும்."

"பார்த்துவிடலாம்! யார் பாதமும் பதிவதற்கு முன் பார்த்த பெருமை எனக்கும் இருக்கட்டும்" என்றேன் சிரித்துக்கொண்டே.

"வாருங்கள்! அந்த 'டெலஸ்கோப்' மாடியில் இருக்கிறது." முன்னால் நடந்தார் அவர்.

விவேகானந்தா கல்லூரியின் புல்வெளி மைதானத்திலிருந்து அந்தக் கல்லூரியைச் சேர்ந்த மூன்று மாடிக் கட்டிடத்தின் மேல் தளத்துக்கு மூச்சு வாங்க ஏறியாகிவிட்டது. அதற்கும் மேலே உள்ள தளத்தில் சனி கோளத்தைப் பார்ப்பதற்குச் சரி செய்து வைத்திருந்த டெலஸ்கோப் இருந்தது. அதை எட்ட ஒரு மர ஏணி. "ஏதாவது ராக்கெட்டில் ஓசிப் பயணம் கிடைத்தால் சனி கோளத்தை நேராகப் பார்த்துக்கொள்கிறேன். இந்த இருட்டு நேரத்தில் மர ஏணி வழியாக மேலே போக எனக்குத் தயக்கமாக இருக்கிறது" என்று சொல்லி வெற்றிகரமாகப் பின்வாங்கி விட்டேன்.

அதனால் என்ன? அதே கட்டடத்தின் மூன்று அறைகளில், எத்தனையோ வான சாஸ்திர விஞ்ஞானிகள் கண்டபடி பல்வேறு கோள்களின் பெரிய பெரிய ஓவியங்களை வைத்திருந்தார்களே! ஏணி ஏறும் சிரமம் இல்லாமலே பார்க்க முடிந்ததே!

விவேகானந்தா கல்லூரி 'வான இயல் கிளப்' ஏற்பாடு செய்திருந்த 'வான இயல்' பொருட்காட்சி விவேகானந்தா கல்லூரியில் வெற்றிகரமாக நடந்து முடிந்தது. அதில், வளர்ந்து வரும் வான இயல் சம்பந்தப்பட்ட பல விஷயங்களையும் தெரிந்துகொள்ள முடிந்தது. விவேகானந்தா கல்லூரி பேராசிரியர் சுப்பிரமணியம் அந்த நாளைய கிரேக்க நாட்டு வான சாஸ்திரிகள் கண்டுபிடிப்பிலிருந்து இன்றைய மேலைநாட்டு வான இயல் நிபுணர்கள் எவ்வளவு தூரம் முன்னேறி யிருக்கிறார்கள் என்று ராக்கெட் வேகத்தில் விவரித்தார். அவருடைய சிஷ்யர்களான கல்லூரி மாணவர்களும் பலவிதமான விவரிப்புப் படங்களுக்குச் சரமாரியான விளக்கங்கள் கொடுத்தார்கள்.

இந்தக் கல்லூரி மாணவர்களைப் போல் புதுக் கல்லூரி மாணவர்களில் சிலரும் வான சாஸ்திர ஆர்வம் கொண்டிருக்கிறார்கள். வான ஆராய்ச்சியில் அராபிய முறை எப்படி என்பதில் அவர்கள் கவனம் செலுத்தியிருக்கிறார்கள். அவர்கள் தயாரித்த சில படங்களும் இந்தக் கண்காட்சியில் இருந்தன.

இந்தப் பொருட்காட்சிக்கு 'டெலஸ்கோப்'களை உதவி அதன் மூலம் நிறைவுபெறச் செய்தவர்கள் சென்னை வான இயல் கழக உறுப்பினர்கள். இந்தக் கழகத் தலைவர் திரு தேவதாஸ், வர்த்தக ஸ்தாபனம் ஒன்றில் பொறுப்பான பதவி வகிப்பவர். அவருடைய முக்கிய பொழுதுபோக்கு வான சாஸ்திர ஆராய்ச்சி. அவரே டெலஸ்கோப் தயாரிக்கிறார். இங்கே ஒரு டெலஸ்கோப் தயாரிக்க இரண்டாயிரத்திலிருந்து மூவாயிரம் ரூபாய் வரை ஆகிறதாம். அதே டெலஸ்கோப்பை வெளிநாட்டிலிருந்து வரவழைக்கப் பத்தாயிரம் ரூபாய்வரை ஆகிறதாம்.

பி.எஸ்ஸி. பட்டப் படிப்பில் கணிதத்தைப் பிரதான பாடமாக எடுத்துக் கொள்பவர்களுக்கு 'வான இயல்' (Astronomy) உப பாடமாக இருக்கிறது. நேரடியாக வானவெளியை நோக்கி ஆராய்ச்சி செய்ய அவர்களுக்கு டெலஸ்கோப்புகள் கொடுக்கப்படுவதில்லை. சர்வ கலாசாலை நிர்வாகம் இந்தப் பாடம் போதிக்கப்படும் கல்லூரிக்கு டெலஸ்கோப்புகள் வழங்க ஏற்பாடு செய்ய வேண்டியது அவசியமாகும். இப்போதைக்கு அவர்கள் தங்கள் புத்தகங்களிலுள்ள சின்ன எழுத்துக்களை மைக்ராஸ்கோப் வைத்துப் பார்ப்பதுடன் திருப்தி அடைய வேண்டியிருக்கிறது!

—பட்டினத்தார்

# சிலையைத் தேடி.. 23

கதை: வாண்டுமாமா—

ரவிக்கு ஏதோ ஆபத்து என்று நீலா கலங்கிப் போயி ருந்தபோது பின்னால் ஒரு குரல் கேட்டது.

ரவியைக் காணாமல் குழம்பு கிறாயா நீலா? அவன் என்னை அழைத்து வரக் கிராமத்துக்கு வந்தான். உன்னைப் பற்றித் தான் அவன் கவலைப் படுகிறான்.

நீசா! உண்மை யிலேயே நான் ரொம்பப் பயந்து தான் போனேன்.

சித்திரம் ரமணி..




மகிழ்ச்சிக் கொந்தளிப்பில் நீலா, தன் முயற்சியை யும் முடிவில் தான் கண்ட காட்சியையும் கூறு கிறாள்.

சத்தியமாகச் சொல்லுகிறேன். நான் சிலையைக் கண்டு பிடித்து விட்டேன். என்ன அழகு தெரியுமா? அத்தனையும் தங்கம். ரவி வரட்டும். நாமெல்லாரும் மறுபடி அதைப் பார்க்கப் போகலாம்.

ரவி வர மாட் டான் நீலா. சிலை இருக்கு மிடத்துக்குப் — போகும் வழி யைச் சொல். என்றால் இனி அதைக் காண மல் இருக்க முடி யாது.




இதே குகைதான். டார்ச் விளக்கை அடி. அதோ அந்த மூலையில் ஒரு பாறை மீது...






# வாழ்வில் முன்னேற விரும்பும் இளைஞர்களில் நீங்களும் ஒருவரா?

முன்னேற விரும்புவோர்க்கு வாழ்வே ஒரு எதிர்நீச்சல்.
அதைச் சமாளிக்க இணையற்ற ஆர்வம், ஈடில்லாமுயற்சி,
உத்வேகம் முதலியன உறுதுணை நிற்கும்.

இவை ஒருங்கிணைந்த இளைஞரா நீங்கள்?

அப்படியானால் உங்களுக்கேற்ற சைக்கிள் பிலிப்ஸ்
உங்கள் துடிப்புமிகு தன்னம்பிக்கை, உறுதிமிகு ஆர்வம்,
இவற்றை அப்படியே பிரதிபலிக்கிறது பிலிப்ஸ் சைக்கிள்.

உயரிய எஃகினால் நுண்ணிய வேலைப்பாட்டுடன்
உருவாக்கப்படும் பிலிப்ஸ் உறுதியில் தன்னிகரற்றது,
சவாரிக்கு சுகமானது, தோற்றத்தில் எடுப்பானது.






இந்தியாவில் தயாரிப்போர்: டி ஐ சைக்கிள்ஸ்
ஆஃப் இந்தியா, அம்பத்தூர், சென்னை-53
உரிமையாளர்கள்: டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆஃப்
இந்தியா லிமிடெட், சென்னை-1
பதிவு பெற்று உபயோகிப்போர்.
* J.A. பிலிப்ஸ் கம்பெனி லிமிடெட்,
யு.கேயின் பதிவுபெற்ற டிரேட் மார்க்குகள்

TIC-PH-5303

வெற்றிப்பாதையில்
வேகமாக முன்னேற

## பிலிப்ஸ்

சைக்கிள்



# உழவுத் தொழிலில் ஓர் அசுர சாதனை!

கவர்னர் வருகிறார் என்பதால் பழமுதிர் பண்ணையும் அதன் சுற்று வட்டாரமும் திமிலோகப்பட்டுக் கொண்டிருந்தன. மேடும் பள்ளமுமாயிருந்த பாதை சீராக்கப்பட்டதுடன் பண்ணையை அடைய ஒரு பகுதியில் புதிய பாதையே அமைத்தார்கள். புழுதி பறக்காமல் இருக்க வழியெங்கும் தண்ணீர் தெளித்தனர். சிறிய அளவில்தான் என்றாலும் மூங்கிலாற்றைக் கடக்க ஒரு பாலமே சமைத்தார்கள். இது ஐ. ஆர். எட்டு நெல், இது கோ 419 கரும்பு, இது கல்யாண் ஸோன்யா 227 கோதுமை என்று பயிர்களுக்கு அறிவிப்புப் பலகைகள் நட்டார்கள். விருந்தினர் விடுதி ஒன்று புதிதாக நிர்மாணிக்கப்பட்டது. போலீஸ் ஸுப்ரின்டெண்டுகளும் ஸி.ஐ.டி. இன்ஸ்பெக்டர்களும் ஜீப்பில் நாளைக்கு நாலு தடவை வந்து போனார்கள். யாரைச் சந்தித்தாலும் "கவர்னர் எப்போது வருகிறார்?" என்பதே பேச்சாக இருந்தது.

இத்தனை பரபரப்புக்கிடையே பழமுதிர் பண்ணையில் அடியேனும் போய் அகப்பட்டுக் கொண்டேன். எல்லாரும் காட்டிய சுறுசுறுப்பு என்னையும் தொத்திக்கொள்ளப் பண்ணையைச் சுற்றி வந்தேன். பண்ணையில் கால்வாசிப் பகுதியைப் பார்த்தாகி விட்டதெனத் தெரிந்ததும் "சுமார் எத்தனை மைல் நடந்திருப்போம்?" என்று கேட்டேன். "ஐந்து மைல் இருக்கும்" என்றார்கள்.

அப்படிச் சொன்னார்களோ இல்லையோ, உடனே கால்கள் வலிக்க ஆரம்பித்து விட்டன! "அப்பாடா!" என்று வரப்பில் உட்கார்ந்து விட்டேன்!

* * *

மதுரை மாவட்டத்தில் மேற்கு மலைத் தொடர்ச்சியை யொட்டினாற்போல் வருஷநாடு என்ற பகுதி இருக்கிறது. பெயருக்கேற்ப மழை சக்கைப் போடாகப் பெய்கிற பிரதேசம் இது. இங்கே மயிலாடு பாறை என்று அழகான பெயர் கொண்ட கிராமம். இன்றைக்கு மாதிரிக்கு ஒரு மயில்கூட ஆடவில்லை என்றாலும் காட்டுப் பிரதேசமாக விளங்கிய இந்த இடத்தில் முன்பு மயில்கள் மழை வரப்போவதை உணர்ந்து ஆனந்த நடனமாடியிருக்கும் என்பதை நம்புவது நமக்குச் சிரமமாயில்லை.

கண்டமனைக்கனூர் ஜமீன் பகுதியாக இருந்த இந்தப் பிரதேசத்தைக் கோவை வட்டாரத்தில் மிகப் பிரபலமான பி. எஸ். ஜி. குடும்பத்தினர் 1941ல் வாங்கினர். அந்த ஆரம்ப நாட்களில் சர்வே வேலைகளை மேற்கொண்டு நீர்ப்பாசன வசதிகளையும் ஆராய்ந்தவர்கள் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடுவும் பி. எஸ். ஜி. கங்கா நாயுடுமாவர்.

"அப்போதெல்லாம் இங்கே கட்டை வண்டியில்தான் வர வேண்டும். ஒரு சமயம் சற்றுத் தூரத்தில் மந்தையாகச் சில யானைகள் மேய்ந்து கொண்டிருந்தன. 'ஐயோ! இங்கே வந்து யாராவது அகப்பட்டுக் கொள்வார்களா? ஓடிப் போய்விடலாம்' என்று பின்னோடு வந்த எங்கள் கணக்குப்பிள்ளை புலம்ப ஆரம்பித்துவிட்டார்." இப்படி எனக்குச் சொன்ன திரு ஜி. ஆர். வரதராஜுலு "இப்போது கூட இந்த மலைச் சரிவுகளிலிருந்து இரவு நேரத்தில் கரடி வருவதுண்டு" என்று கடுக்காய் கொடுத்து இரண்டு நாட்கள் தூக்கத்தைக் கெடுத்தார்!

காடுகளையெல்லாம் அழித்தபோது கிடைத்த கரியை டி.வி.எஸ். பஸ்கள் ஓட விற்றார்கள். பெட்ரோல் பஞ்சம் இருந்த காலம் அது.

1967ல் ஜி. ஆர். கோவிந்தராஜுலுவும் ஜி. ஆர். வரதராஜுலுவும் இப்பகுதியில் அழகிய விவசாயப் பண்ணை அமைக்கலாம் என்று தீர்மானித்துத் தீவிரமாக உழைக்கத் தொடங்கினார்கள். புல்டோஸர்கள் இரவு பகலாக இயங்கிச் சரிவான நிலத்தைச் சமன்படுத்தின. ஒவ்வொன்றும் நாலு நீச்சல் குளத்துக்கு இணையான அளவில் ஏழு கிணறுகள் வெட்டப்பட்டன. பண்ணையைச் சுற்றி ஒரு பக்கம் மூங்கிலாறும் இன்னொரு பக்கம் வைகையும் ஓடினாலும் ஆற்றுப் பாசனத்துக்கு ஆட்சேபணை எழும் என்பதால் இந்த ஏற்பாடு. மாரிக்காலத்தில் மலை முகடுகளில் மழை கொட்டோ கொட்டு என்று கொட்டித் தீர்க்கும்போது நில அரிப்பு ஏற்பட்டு வளமான மண் ஆற்றோடு போய்விடும் என்பதால் நிலப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியிருந்தது. மலை அடிவாரங்களை யொட்டினாற்போல் வாய்க்கால்கள் வெட்டப்பட்டன. இந்த வாய்க்கால்களிலிருந்து

படம்: பழமுதிர் பண்ணையில் தொலைவில் தெரியும் மலைத்தொடர்களைப் பார்த்தபடி அமர்ந்திருக்கும் திரு ஜி. ஆர். கோவிந்தராஜுலு

குறுக்குவாட்டில் வேறு வாய்க்கால்கள் பிரிந்து ஆற்றில் போய்க் கலக்குமாறு அமைக்கப்பட்டன.

இப்படிப்பட்ட அசுர சாதனைகளைப் புரிந்த ஜி. ஆர். கோவிந்தராஜுலு இன்று அந்தக் கன்னி மண்ணில் எந்தப் பயிரைப் போட்டாலும் செழித்து வளர்வதைக் கண்டு பேரானந்தம் அடைந்து வருகிறார். "கோவையிலிருந்து அடிக்கடி இங்கு வந்து போகிறேன். காலை ஆறு மணிக்கு நடக்க ஆரம்பித்தால் எட்டரை, ஒன்பது மணி வரை பண்ணையை மேற்பார்வையிட்டவாறு நடந்து கொண்டே இருப்பேன். மாலையிலும் இதே போல்தான்" என்றார் திரு கோவிந்தராஜுலு.







அவரைப் போன்று தொழில் துறையில் இறங்கித் தினம் நூற்றுக் கணக்கான பிரச்னைகளுடன் போராடி வருபவர்களுக்குப் பழமுதிர் பண்ணை மாதிரி ஓர் இடமும் அடிக்கடி அஞ்ஞாத வாசம் புரிய அவசியம்தான்! இங்கு டெலிபோன் கிடையாது. தந்தி அடித்தால் வந்து சேர நாலு நாட்கள் ஆகும்! ஆகவே கவலைகளை அடியோடு மறந்து இயற்கை எழிலிலும், பசுமைச் செழிப்பிலும் மனத்தை லயிக்கவிட்டுக் கோவைக்குத் திரும்பும்போது புதுப்பிக்கப்பட்ட மனிதராகவே செல்கிறார்!

நாலாபுறமும் மலைகள் சூழ்ந்திருக்க, பள்ளத்தாக்கில் அமைந்துள்ள மூந்நூறு ஏக்கர் பண்ணையின் இயற்கை எழிலில் நானும் வெகுவாக ஈடுபட்டு "அற்புதமா யிருக்கிறது" என்றேன். அருகிலிருந்த ஸ்ரீமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுலு "இப்போது இதைப் பார்த்தது போதாது; அதிகாலையில் ஆறு மணிக்குக் குளிரைப் பொருட்படுத்தாமல் போர்வையை உதறிவிட்டு எழுந்து நடக்க வேண்டும்" என்றார். ஸ்ரீமதி சந்திரகாந்தி நிரம்பக் கலையுள்ளம் படைத்தவர் என்பது எனக்குத் தெரியும். இட்டிலியின் மிருதுத் தன்மை முதல் இசையின் நெளிவு சுளிவு வரை ஊன்றிக் கவனிக்கும் உள்ளம் கொண்டவர். பண்ணைக்கு அவர் தேர்ந்தெடுத்த பெயரைத்தான் பாருங்களேன்! "பழமுதிர் பண்ணை" என்பதை விட அழகான ஒரு பெயரைச் சூட்ட முடியுமா?

கொஞ்சம் சிரமமாக இருந்தாலும் ஸ்ரீமதி சந்திரகாந்தி சொன்ன காரியத்தைச் செய்து விடுவது என்று தீர்மானித்து ஆறு மணிக்கெல்லாம் பற்கள் கிடுகிடுக்க எழுந்தேன். "ஐயா (கோவிந்தராஜுலு) காத்துக்கிட்டிருக்காங்க, உங்களுக்காக" என்றார் பண்ணையில் பணியாற்றும் ஒருவர்.

இருவருமாய் நடந்தோம். மலைகளுக்குப் பின்னால் உதயமாகும் சூரியனைக் காண இங்கு சற்று நேரமாகிறது. ஆனால் ஆதவன் நம் கண்களுக்குத் தென்படு முன்னரே அதன் சிவந்த கிரணங்கள் மலை முகடுகளைத் தழுவுகின்றன. அப்போது இளஞ் சிவப்பு நிறத்தில் அந்த மலைச் சிகரப் பாறைகள் ஒளிர்கின்றன. படிப்படியாக அந்த நிறம் மாறித் தங்கக் கலசங்களைப் போல் அவை ஜொலிக்கின்றன. பனிப் படலத்தினூடே தென்படும் இந்தக் காட்சிக்கு மனோரம்யமான இசையைப் பின்னணியில் வழங்கிப் பரவசப்படுத்துகின்றன பல நூறுவிதமான பட்சிகள்.

பழமுதிர் பண்ணையைப் பார்க்கப் போகிறேன் என்று நான் நண்பர் ஒருவரிடம் கிளம்புவதற்கு முன்னால் சொன்ன போது, "வசதி உள்ளோர் பலர் இப்போதெல்லாம் ஒரு ஹாபியாக விவசாயத்தில் ஈடுபடுகிறார்கள்" என்றார். வாஸ்தவம். ஆனால் ஸ்ரீ ஜி. ஆர். ஜி. யின் பழமுதிர் பண்ணை ஒரு 'ஹாபி' யாக மட்டும் நடத்தப்படுவதல்ல. தொழில் துறையில் முன்னணியில் நின்றாலும் விவசாயக் குடும்பத்திலே பிறந்து வளர்ந்தவர் ஜி.ஆர்.ஜி. ஏற்கனவே கோவைக்கருகில் வேடப்பட்டி பண்ணையில் பெற்ற அனுபவ







ஆற்றலோடு பழமுதிர் பண்ணையையும் திட்டமிட்டு உருவாக்கித் திறம்பட நிர்வகிக்கிறார்.

நாலரை லட்சம் ரூபாயை ஒரு நபர் என்ற முறையில் யாரால் துணிந்து முதலீடு செய்ய முடியும்? ஆமாம், கானகத்தை அழித்துப் பண்ணையாக உருமாற்ற அந்த அளவுக்குச் செலவாகியிருக்கிறது. ''இவ்வளவு செல்வத்தை இதில் முடக்கியிருக்கிறீர்களே பத்து சதவீதம் லாபம் கிடைக்குமா?'' என்று துணிந்து ஒரு கேள்வியைப் போட்டேன்.

''அதற்கு மேலேயே கிடைக்கும். இதோ பாலன்ஸ் ஷீட்!'' என்று ஜி. ஆர். ஜி. ஆண்டறிக்கையைக் கொடுத்தார். இந்த ஆண்டு நிகர லாபம் வரிகளையெல்லாம் கட்டிய பிறகு ரூபாய் இருபதினாயிரம் என்று அது எடுத்துக் காட்டியது. மேலும் காடாக இருந்த நிலப்பரப்பின் மதிப்பு பண்ணையாக மாறியதும் பல மடங்கு உயர்ந்துவிட்டதையும் அது உணர்த்தியது. பழமுதிர் பண்ணை இப்போதுதான் காய்க்க ஆரம்பித்திருக்கிறது. இரண்டாவது ஆண்டுதானே இது? பழுக்க ஆரம்பித்துவிட்டால் பலன் அமோகமாய் இருக்கும்தான்.

இரண்டே ஆண்டுகளில் எவ்வளவு மகத்தான மாறுதல்? ஒரு பக்கம் கண்ணுக்கெட்டிய தூரம்வரை நெல் வயல் பசேலென்று குளிர்ச்சியாகத் தென்படுகிறது. இன்னொரு பக்கம் கரும்பு செழித்துச் சர்க்கரையாக மாறக் காத்திருக்கிறது. இப்பால் பருத்தி என்னைக் கோவைக்குக் கொண்டுபோய்த் தரமான அறுபது கவுண்ட் நூலாகத் திரிக்கலாம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறது. இன்னும் பசுந்தழை உரமும், கம்பு, சோளம், ராகி, கோதுமை, உளுந்து, துவரை போன்ற தானியங்களும், ஆரஞ்சு, மா, பலா திராட்சை போன்ற பழவகைகளும் மிளகாயும் தென்னையும் கொழிக்கின்றன.

சாகுபடிக்குப் புதிதாகக் கொண்டு வரப்பட்ட நிலமாதலால் ஊட்டமுள்ளதாய் விளங்குகிறது. வளமான சிவந்த மண். அதிகமாக உரம் தேவைப்படுவதில்லை. சுற்று வட்டாரத்தில் மலைகள் இருப்பினும் பண்ணை மண்ணில் ஒரு கல்லோ பாறையோ கிடையாது!

நாலு அடி உயரமே உள்ள மோரிஷியஸ் வாழை ஓராண்டில் குலை தள்ள, அது தரையைத் தொடுமளவுக்கு நீண்டு,

- நாக்கில் நீர் ஊறச்செய்யும் திராட்சைக் குலைகள்
- நாலு நீச்சல் குளம் அளவில் உள்ள ஊற்றில் ஒரு பகுதிதான் படத்தில் தெரிகிறது.
- ஸ்ரீமதி சந்திரகாந்தி, சர்தாரிணி உஜ்ஜல்சிங், கவர்னர்.
- மூங்கிலாறு
- 'கேர்' நிறுவனத்தின் உணவை ஏழைப் பெண்மணிகளுக்கும் குழந்தைகளுக்கும் வழங்கும் பணியைத் தொடங்கி வைத்தார் சர்தாரிணி உஜ்ஜல் சிங்
- வண்டி வண்டியாக வாழைத் தார்கள்

பருத்துமிருக்கிறது! இன்னொரு பக்கம் இருபதடி உயரமுள்ள வாழைகளும் உள்ளன.

இரவு பகல் இருபத்து நாலு மணி நேரமும் இரண்டு பம்பு செட்டுகள் நீரை இறைத்தாலும் வற்றாத பிரம்மாண்டமான கிணற்றைப் பார்த்துப் பிரமித்துக் கொண்டிருக்கையில் மூங்கிலாற்றுக்கு அப்பால் ஒரு குடியானவன் குத்தகைக்கு எடுத்திருந்த தனது சிறிய அளவு நிலத்துக்குக் கவலையால் நீர் இறைத்துக் கொண்டிருப்பதும் கண்ணில் தென்பட்டது. 'கீங் கீங்' என்ற சத்தத்துடன் சால் கிணற்றுக்குள் போய் வந்து கொண்டிருந்தது. இந்தக் காட்சியை — பழைமையையும் புதுமைப் புரட்சியையும் அருகருகே — நான் பார்த்து ரசித்தது போலவே மொட்டை மரம் ஒன்றில் அமர்ந்திருந்த மீன்கொத்தி ஒன்றும் வாலை ஆட்டியபடி கண்டு களித்துக் கொண்டிருந்தது.

அப்போது வெர்னுன் இ. ராஸ் என்பவர் எழுதியதைப் படித்த ஞாபகம் எனக்கு வந்தது.

''பழமுதிர் பண்ணைக்கு விஜயம் செய்து பார்த்ததில் நான் உண்மையான மகிழ்ச்சி அடைந்தேன். சாதனைகளைப் புரிவதற்குண்டான வாய்ப்புகள் மிகப் பெரும் அளவில் இருப்பதை உணர்ந்தேன். இது மறுபடியும் எதைக் காட்டுகிறது என்றால், இந்திய விவசாயத் துறையின் உண்மையான தேவை, முதலீடு பெருகச் செய்வதுதான் என்பதையே. அவ்வாறு செய்தால், உள்ள வாய்ப்புக்களைச் சாதனைகளாக மாற்ற முடியும். இதை இன்றைய ஏழை உழவனாலோ கிராமவாசியாலோ சாதிக்க முடியாது. பழமுதிர் பண்ணை போன்ற பல அமைப்புகள்தாம் உங்கள் அதிகார வர்க்கத்துக்கு நிலத்தைத் துண்டாடுவதில் முடிகிற கொள்கைகளின் அபத்தத்தை உணர்த்த முடியும்.''

பழமுதிர் பண்ணைக்கு விஜயம் செய்த இந்த அமெரிக்க அறிஞர் அமெரிக்கப் பல்கலைக் கழகம் ஒன்றிலிருந்து விவசாயத் துறையில் யோசனைகள் கூற இந்தியாவுக்கு வந்தவர். அவர் இப்படி எழுதியிருக்கிறார்.

மூன்று ஏக்கர்களைக் குத்தகைக்கு எடுத்தவராயினும் சரி, முந்நூறு ஏக்கரில் பண்ணை நடத்துவோராயினும் சரி, பிரச்னைகள் இல்லாது போகாது. குறிப்பாக, திராட்சை இருக்கிறதே அதைக் கண்ணே போல் கட்டிக் காத்தாலும் போதாது. நோயுற்ற ஒரு செடியைத் தொட்டுவிட்டுக் கையைக் கழுவாமல் இன்னொரு செடியைத் தவறிப் போய்த் தொட்டுவிட்டால் வந்தது ஆபத்து. நோய் அதிலும் பரவிவிடும். பூச்சி வராமல் தடுக்க அடிக்கப்படும் சில மருந்துகள் பின்னால் அந்த உணவு வகைகளை உட்கொள்ளும் மனிதனுக்குத் தீங்கு விளைவிக்கின்றன. மனிதனின் சுகவாழ்வுக்கு உதவும் சில உயிரினங்களையும் அழித்துவிடுகின்றன. இப்படித்தான் இருபதாம் நூற்றாண்டின் புரட்சிகரமான கண்டுபிடிப்பாகக் கருதப்பட்ட டி. டி. டி.க்கு இன்று மேலைநாடுகள் பலவற்றில் தடை உத்தரவே வந்துவிட்டது. பாரதத்திலும் சீக்கிரமே வரலாம். சில புழு பூச்சி ரகங்கள் ஆரம்பத்தில் மருந்து தெளிப்பதால் மடிந்து போனாலும் மீண்டும் விரைவில் அந்த மருந்தைத் தாக்குப்பிடிக்கும் சக்தி பெற்று விடுகின்றன; அழிவதில்லை! கிளிரிஸிடியா என்று ஒரு வகைப் பசுந்தழை உரம் சில ஆண்டுகளுக்கு முன் மிகப் பிரபலமாயிருந்தது. பல ஏக்கர்களில் இந்தச் செடி பயிரானபோது கொடிய பூச்சிகளையும் பயிர் செய்த கதையாக முடிந்தது!

இவற்றையெல்லாம் விட மிகப் பெரிய பிரச்னையான நில உச்சவரம்பு பற்றி ஜி. ஆர். ஜி.யைக் கேட்டேன்: ''முந்நூறு ஏக்கரை எப்படி விட்டு வைத்திருக்கிறார்கள் உங்களிடம்?''

''இவை யெல்லாம் புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்ட நிலம். அதற்குச் சட்டத்தில் விலக்களித்திருக்கிறார்கள்.''

''எத்தனை நாளைக்கு? காட்டை அழித்துப் பயிர் விளையும் வளமான பிரதேசமாக்கிவிட்டீர்கள். இனி அதிக காலம் சொத்துரிமை கொண்டாட அனுமதிக்க மாட்டார்களே!''

''கேட்டால் கொடுத்து விட்டுப் போகிறேன். ஒரு சாதனையைப் புரிந்த பெருமை எனக்கு இருக்கிறது. சுற்று வட்டாரத்தில் நூற்றுக்கணக்கான மக்களுக்குச் சில காலம் வேலை வாய்ப்புக் கொடுத்த திருப்தி இருக்கிறது. போதாதா?''

இதனைத் தைரியமாகவும் சர்வ சாதாரணமாகவும் சொன்னார் திரு ஜி. ஆர். ஜி.

பழமுதிர் பண்ணை நீங்கலாகச் சுற்றுப்புறத்தில் அவர் குடும்பத்துக்குச் சொந்தமான நிலப் பகுதியில் நூற்றுக்கணக்கான ஏக்கரில் இப்போதே பயிர் விவசாயம் செய்து கொண்டுதான் இருக்கிறார்கள். ரிஜிஸ்தர் செலவுகளை விவசாயி ஏற்றால் பட்டா வழங்கிவிடவே தயாராக இருக்கிறார். தாமதத்துக்குக் காரணம் அரசாங்க அலுவலகங்களின் சிவப்பு நாடா.

செல்வமும் உயர் பண்புகளும் நிரம்பப் பெற்ற ஜி. ஆர். ஜி., பிப்ரவரி ஏழாந் தேதியன்று கவர்னரையும் சர்தாரிணி உஜ்ஜல் சிங்கையும் பழமுதிர் பண்ணைக்கு விமரிசையாக வரவேற்றுச் சுற்றிக் காட்டினார். நமது கவர்னர் உஜ்ஜல்சிங் விவசாயத் துறையில் நல்ல அநுபவஸ்தர். ''நாலாயிரத்து ஐந்நூறு ஏக்கரை பாகிஸ்தானுக்கு வெகுமதியாகக் கொடுத்து விட்டு வந்தவன் நான்'' என்று சிரித்தபடியே தம்மைப் பற்றிக் கூறிக் கொள்ளும் அளவுக்கு மனோதிடம் கொண்டவர்.

அவர் பழமுதிர் பண்ணையைப் பற்றிக் கூறுகிறார் : ''விஞ்ஞான ரீதியான நவீன முறைகளைக் கையாண்டு வெற்றிகரமாக நடத்தப்படும் இந்தப் பண்ணையைச் சுற்றிப் பார்த்ததில் நான் பல விஷயங்களைக் கற்றுக் கொண்டேன். இதை ஒரு இலட்சியப் பண்ணையாகக் கொண்டு சுற்றுவட்டாரத்தில் உள்ள விவசாயிகள் எல்லாரும் வந்து இங்கு நடப்பனவற்றைத் தெரிந்து கொண்டு பயன் பெற வேண்டும்.''

விவசாயத் துறையில் மிகுந்த ஈடுபாடும், நேரடி அநுபவமும் உள்ள நமது மாநில கவர்னர் வழங்கிய நற்சான்றிதழ் இது. வசிஷ்டர் வாயால் பிரும்ம ரிஷி! அசப்பிலே பார்த்தால் நமது கவர்னர் வசிஷ்டர்போலவே இல்லையோ!

— குட்டி கிருஷ்ணன்




## அத்தியாயம் 8

"அம்மா...அம்மா!" வாசு கூவிக் கொண்டே உள்ளே ஓடினான்.

"என்னப்பா இவ்வளவு அவசரம்?" புடைத்துக் கொண்டிருந்த அரிசியை டப்பாவில் கொட்டி விட்டுத் தேவகி கால்களை உதறிக்கொண்டே எழுந்தாள்.

"என் நண்பன் ஆனந்தை நினைவிருக்கிறதா?"

"நன்றாகக் கேட்டாய் போ! 'உங்கள் மைந்தனை உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்பதுபோலிருக்கு கேள்வி."

"சரியாகச் சொன்னீர்கள், அம்மா! மைந்தன் உறவில் நீங்கள் அவனை நோக்குவதைத்தான் நானும் விரும்புகிறேன். அவன் வீட்டிலிருந்துதான் நான் இப்போது வருகிறேன்.

"ஸ்ரீகாந்த் என்று ஒரு பெரியவர். அவர் சொந்தமாகவே சித்திரம் வரையக் கூடியவர். சில ஓவியர்களுக்கும் அவர் ஆதரவு அளிக்கிறார். சித்திரங்கள் சம்பந்தமான பல தொழில்களில் அவர் சம்பந்தப்பட்டிருக்கிறார். அவர் தயவை நாடி எத்தனையோ பேர்கள் காத்து நிற்கிறார்கள். ஆனந்தை யதேச்சையாக ஒரு முறை சந்தித்திருக்கிறார். அவன் சித்திரக் கலையில் அவர் தம் உயிரையே வைத்திருக்கிறார்."

"கேட்கச் சந்தோஷமாக இருக்கிறது. அவர் அவனுக்கு வேலை போட்டுத் தரப் போகிறாரா?"

"வேலை மட்டுமா? அதைக் காட்டிலும் மேலாக அவனை மேனாடுகளில் ஆறு மாதங்கள் சுற்ற வைக்கப் போகிறார். அங்குள்ள வனப்பு மிக்க காட்சிகளை அவன் வரைந்து வர வேண்டும்.... போக்குவரத்துச் செலவெல்லாம் ஸ்ரீகாந்தைச் சேர்ந்தது. ஆனந்தின் தந்தை சிதாபதிக்கும் பணம் தரப்படும்."

"உண்மையாகவா?"

"மேலும் கேளுங்கள். அவன் திரும்பி வந்த பிறகு ஆயிரம் ரூபாய் சம்பளம். அதற்கு மேல் இன்கிரிமெண்ட். இப்போது போலவே வீட்டிலிருந்தபடியே தொழிலைக் கவனிக்கலாம்."

"அப்படியா? கேட்கக் கேட்க மகிழ்ச்சியாக இருக்கிறது. ஆனால் வெளிநாடு போகுமுன் அவனுக்கு ஒரு கால்கட்டைப் போட்டுவிட வேண்டும்."

"அந்தக் கால்கட்டும் அவனுடன் வெளிநாடு போக ஆசைப்பட்டால்?..."

"தாராளமாகப் போகட்டுமே!"

"இலேசாகச் சொல்லி விட்டீர்கள். ஆனால் அவனோ விவாகப் பேச்சை எடுத்தாலே சள்ளென்று விழுகிறான். எனக்கு ஒன்று தோன்றுகிறது."

"என்ன?"

"ரமாவின் சகோதரி காந்தி இருக்கிறாளே!"

"நல்ல யோசனைதான். காந்தி ரமாவையும் விடக் கெட்டிக்காரி. ஆனந்துக்குத் தகுந்த பெண்ணும்கூட."

"ஆனால் அவள் யாரைக் காதலிக்கிறாளோ?"

"போங்கடா போக்கத்தவங்களா! காதல்! காதல்! இதே பேச்சுதான்! தொத்துவியாதிபோல் பரவி விட்டது. காந்தி யாரைச் சுற்றுகிறாளாம்?"

"தெரியவில்லை. ரகசியமாக இருக்கிறது. ஒருவேளை ஆனந்தையே காதலிக்கிறாளோ, என்னவோ?"

"அப்படியானால் பழம் நழுவிப் பாலில் விழுந்தாற் போலத்தான்."

"ஆனந்த் ஒப்ப வேண்டாமா?"

"அதற்கு நானா பிணை?"

"ஏன் அம்மா? எப்போது நீ கோசலராமைப் பார்க்கப் போகிறாய்?"

"நான் எதற்குப் போக வேண்டும்? அவரோ பணக்காரர். அவரே முன்னின்று எல்லா ஏற்பாடும் செய்யலாமே!"

"அம்மா! அவர் குணத்தைப் பற்றி ரமாதான் சொல்லியிருக்கிறாளே... அவருக்கு எப்போதும் வியாபாரச் சிந்தனைதானாம். குடும்பத்து வேலையை எடுத்துப் போட்டுக் கொண்டு செய்யவே அவருக்குத் தெரியாதாம்!"

தேவகி முன்கூட்டியே தன் வருகையை அறிவித்து விட்டுத்தான் கோசல



''அவரோடு சரியாகப் பேச முடிய வில்லை. பேச ஆரம்பித்தபோது யாரோ வந்து விட்டார்கள். ரமாவின் தங்கை காந்தியிடம் சொல்லி விட்டு வந்திருக் கிறேன்!'' என்றாள் தேவகி.

இரண்டு நாட்கள் ஓடி விட்டன. தேவகி வந்து போன விஷயத்தைப் பற்றிக் கோசல்ராமிடம் காந்தியினாலும் பேச முடியவில்லை; ரமாவினாலும் பேச முடியவில்லை. தேவகியோ வாசுவோ கேட்டால் என்ன பதில் சொல்வது? — இத்தனை நாட்களும் ரமாவையும் வாசு வையும் நெருங்கிப் பழகவிட்ட கோசல் ராம் திடீரென்று இப்பொழுது ஏன் பாய்ச்சு காட்டுகிறார்? வாசுவை அவருக் குப் பிடிக்காமல் போய்விட்டதா? — இரு வருக்கும் ஒரே கவலையாகி விட்டது.

இருவரும் யோசனையில் ஆழ்ந் திருந்தபோது டெலிபோன் மணி அடித் தது. காந்தி ரிஸீவரைக் கையில் எடுத் தாள். ''ஹலோ!''

''நான் வாசு பேசுகிறேன். அங்கு யார்?''

''காந்தி பேசுகிறேன்.''

''ரமாவைக் கூப்பிட முடியுமா?''

''என்ன விஷயம்?''

''ரமாவை முதலில் கூப்பிடு.''

காந்தி கோபத்துடன் மேஜையின்மீது ரிஸீவரை வைத்தாள். ''ரமா! நீதான் பேசணுமாம்.''

''வாசுவா பேசுகி றார்?'' ரமா பரக்கப் பரக்க ரிஸீவரை எடுத் தாள். ''ஹலோ வாசு, நான் ரமா பேசுகிறேன்.''

''முதலிலேயே நீ பேசுவதற்கென்ன வாம்?''

''நீங்கள்தான் பேசு கிறீர்கள் என்று இந்தப் போனுக்குத் தெரியாதே! தெரிந் திருந்தால் சொல்லி யிருக்கும். நான் எடுத் திருப்பேன், போனை! என்ன விஷயம், சொல்லுங்கள்!''

''இன்று பிற்பகல் எனக்கு ஆபீஸ் கிடை யாது. நாம் இருவ ரும் சினிமாவுக்குப் போகிறோம்...''

ரமா சுற்றிலும் பார்த்தாள். காந்தி

ராமைப் பார்க்கச் சென்றாள். அவள் போனபோது கோசல்ராம் வீட்டில் இல்லை. சொல்லாமல் கொள்ளாமல் எங்கேயோ வெளியே போய்விட்டார்.

தேவகிக்கு என்னவோ போல் இருந் தது. அவள் முகத்தைப் பார்த்த காந்தி, ''அப்பாவுக்கு இன்று மீட்டிங்காம். அதை ஒத்திப் போட முடியாதாம். 'அந்த அம்மா வரும்போது நான் இல் லாமல் இருப்பது நன்றாக இராதே. என்ன செய்வது?' என்றார். நான்தான் அவரைச் சமாதானப்படுத்தி, நானே உங்களிடம் பேசுவதாகச் சொல்லி, அனுப்பி வைத்தேன். விருப்பமில்லா மலேதான் போயிருக்கிறார்'' என்றாள். காந்தியின் சமயோசிதத்தைக் கண்டு ரமா மனத்துள் வியந்தாள்.

''அதனாலென்ன? நான் வந்திருந் தது பற்றி நீயே அப்பாவிடம் சொல்லி முகூர்த்தத் தேதியைச் சீக்கிரம் குறிக்கச் சொல்லு!'' என்று கூறி விடைபெற் றாள் தேவகி. ஆனால் அவள் மனத் துக்கு நிம்மதியே யில்லை. காந்தி கூறி யதை உண்மையென நம்ப மறுத்தது அவள் மனம்.

திரும்பிய தாயாரைப் பார்த்து, ''கோசல்ராம் என்னம்மா சொன்னார்?'' என்று ஆவலுடன் கேட்டான் வாசு.



வாசல் பக்கம் சென்றிருந்தான். ''காந்தியையும் அழைத்து வரட்டுமா?'' என்று கேட்டாள் ரமா.

''இருவருக்குத்தான் டிக்கெட் எடுத்திருக்கிறேன்....'' டக்கென்று போனை வைத்து விட்டான் வாசு.

''காந்தி! நீயும் சினிமாவுக்கு வருகிறாயா?'' — காந்தி வருவதை வாசு விரும்பவில்லை என்பது தெரிந்திருந்தும் துணிச்சலாகக் கேட்டாள் ரமா.

''காதலர்களைப் பின்பற்றிச் செல்லும் முட்டாள் இல்லை, நான்.''



அப்புறம் ரமா அவனை வற்புறுத்தவில்லை. வாசு குறிப்பிட்ட நேரத்துக்கு வந்தான். சுற்று முற்றும் பார்த்தான். ''நீ மட்டும்தானே?'' என்று மெள்ளக் கேட்டான்.

''இல்லை, இரண்டு பேர்!''

''உனக்கு எத்தனை சொன்னாலும் புரியாது. காந்தியையும் கூப்பிட்டு வைத்திருக்கிறாயே! மூன்று பேர் ஸ்கூட்டரில் எப்படிப் போவதாம்?''

''ஐயே! கோபத்தைப் பார்! நீங்கள் கூப்பிட்டால் கூடக் காந்தி வரத் தயாராக இல்லை... இரண்டு பேர் என்று நான் குறிப்பிட்டது உங்களையும் என்னையும்தான்!''

வாசு சிரித்தபடி நிம்மதியாகப் பெருமூச்சு விட்டான். ஸ்கூட்டர் ரமாவை ஏற்றிக் கொண்டு கிளம்பியது. ''உன் அப்பாவைப் பார்த்து என் அம்மாவால் பேச முடியவில்லையாமே! ஏதாவது சொன்னாரா?'' என்று போகும் வழியில் கேட்டான் வாசு.

ரமாவுக்குச் சப்தநாடியும் ஒடுங்கிவிட்டது. என்ன பதில் சொல்வது என்று புரியாமல் தவித்துத் தண்ணீரானாள். 'இந்த நேரம் காந்தியும் கூட இருந்தால் இந்தச் சிரமம் இருக்காதல்லவா?' இப்படி எண்ணியவள் தன் முகம் போன போக்கை மறைத்துக் கொண்டு, ''இரண்டு நாட்களாக இராப் பகல் அவருக்கு ஒழிவே இல்லை!'' என்று சொல்லி வைத்தாள்.

* * *

உண்மையில் ரமாவும் வாசுவும் சினிமா செல்வதைப் பார்த்துக்கொண்டு வீட்டிலிருக்கப் பிடிக்காமல்தான் காந்தி கல்லூரிக்கு வந்தாள். இங்கு வந்த பிறகு ஏன் வந்தோமென்றிருந்தது. வீட்டுக்குப் போகவும் மனமில்லை. எனவே, மியூசியத்தில் நுழைந்தாள்.

அங்கு ஆனந்த் பண்டைய காலச் சிலை ஒன்றை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

காந்தி அவன் அருகில் சென்றாள்.

''ஏது, இந்தச் சிலைகளில் இவ்வளவு ஆர்வம்?'' என்று கேட்டாள்.

''ஓ! காந்தியா? இங்கே எப்படி?''

''பொழுது போகவில்லையே என்று இங்கே வந்தேன். இங்கும் பொழுது போகவில்லை.''

''ரமா வீட்டில் இல்லையோ?''

''அவள் வாசுவோடு சினிமாவுக்குப் போயிருக்கிறாள்.''

''அப்படியானால் என் வீட்டுக்கு வரலாமே! அப்பாவுக்கும் அறிமுகம் செய்து வைக்கிறேன்!'' என்றான் ஆனந்த்.

காந்தி சற்று யோசித்தாள். முன்பு ஒருமுறை ஆனந்தோடு அவள் சினிமாவுக்குச் சென்றபோதே ரமா, ஏதேதோ கற்பனை செய்ய ஆரம்பித்துவிட்டாள். இப்போது இவர் வீட்டுக்குப்போனால்...? சொல்லட்டுமே! எந்தக் கற்பனை உலகில் வேண்டுமானாலும் சஞ்சரித்துக் கொள்ளட்டுமே! ரமா ஊரைச் சுற்றும் போது அவள் மட்டும் ஏன் வீட்டோடு இருக்க வேண்டுமாம்? ஆனந்த் கூப்பிடுவதால்தானே அவள் போகிறாள்?

''உங்கள் சித்திரங்களைப் பார்க்க எனக்கு வெகு நாட்களாகவே ஆவல். காட்டுவீர்கள் அல்லவா?'' என்று கேட்டவாறே காந்தி கிளம்பி விட்டாள்.

''ஓ, தாராளமாக!'' என்று கூறிய ஆனந்த் அவளைத் தொடர்ந்தான்.

''அப்பா, இவள்தான் ரமாவின் தங்கை காந்தி. மியூசியத்தில் சந்திக்க நேரிட்டது. அழைத்து வந்தேன்!''

சீதாபதி காந்தியையே ஆவலுடன் நோக்கினார். வாசு சொல்லியிருந்த பெண்ணல்லவோ இவள்? எவ்வளவு அழகாக இருக்கிறாள்? ஆனந்த் இவளை விவாகம் செய்து கொண்டால்....? ஏற்ற ஜோடியாக இருக்கும். ஆனால் ஆனந்த் அன்று கல்யாணப் பேச்சை எடுத்தபொழுது சிறு குழந்தையைப் போல் அழுது விட்டானே! ஒருகால், இந்தப் பெண்ணையே காதலித்து இவளை நிராகரித்திருப்பானோ?

'' வாம்மா, காந்தி ! உட்காரு ! ரமா பலமுறை வாசுவோடு வந்திருக்கிறாள். நல்ல பெண். அதே போல் நீயும் நல்ல பெண்ணாகத்தான் காணப்படுகிறாய். அடிக்கடி வந்து போய்க் கொண்டிரு, அம்மா!''என்றார் சீதாபதி.

ஆனந்த், காந்தி கேட்டுக் கொண்டபடியே தன் சித்திரங்களைக் காட்டினான்.

''இத்தனை கைத் திறனை வைத்துக் கொண்டு நீங்கள் ஏன் சும்மா இருக்கிறீர்கள் ?'' சித்திரங்களைப் பார்த்து விட்டுக் காந்தி கேட்ட கேள்வி இது.

''ஸ்ரீகாந்த் என்று ஒருவர் இவனை மேல்நாடுகளுக்கு அனுப்பத் தயாராயிருக்கிறார். ஆனால் இவன் அப்பாப் பிள்ளை. அதனால் போக முடியாது என்று கூறிவிட்டான்'' என்றார் சீதாபதி.

''காந்தி! நீயே கூறு. இப்படி இருக்கும் அப்பாவை நல்ல பாதுகாப்பில் விடாமல் நான் கிளம்பிவிட முடியுமா? அப்பாவைக் கவனிக்க ஒருவர் வேண்டாமா ?'' என்று கேட்டான் ஆனந்த்.

காந்தியின் மனத்தில் சட்டென ஓர் எண்ணம் தோன்றியது.''நீங்கள் கவலைப் படாதீர்கள். எனக்குப் படிப்பெல்லாம் முடிந்து விட்டது. வீட்டில் உட்கார்ந்து

எப்படியடா பொழுதைக் கழிப்பது என்று தவித்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் தந்தையைக் கவனிக்கும் பொறுப்பை என்னிடம் விட்டு விடுங்கள்!'' என்றாள்.

அவள் குரலில் ஓர் உறுதியைக் கண்ட ஆனந்த், ''நீ இப்படிக் கூறுவது பற்றி மகிழ்ச்சி. வாசுவே இந்தப் பொறுப்பை ஏற்பதாகக் கூறி என்னை மேனாட்டுக்கு அனுப்புவதற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டான்! நான் புறப்படுவதற்காகவே ரமாவுக்கும் தனக்கும் விவாகத்தை முடிக்கவும் துடிக்கிறான்'' என்றான்.

தேவகி கல்யாணம் பேச வந்த காரணம் காந்திக்குப் புலப்பட்டது.

''ரமா, வாசு ஒருவரும் அவசியமில்லை. நானே கவனித்துக் கொள்கிறேன்'' என்று காந்தி உறுதியாகக் கூறினாள்.

இதே நேரத்தில் ஸ்ரீகாந்தின் கார் ஆனந்தை அழைத்துச் செல்ல வந்தது.

''நீங்கள் சென்று வாருங்கள். உங்கள் தந்தையிடம் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு நான் போய் வருகிறேன்!'' என்றாள் காந்தி.

ஆனந்த் சென்று விட்டான்.

''இப்படியொரு மகனைப் பெற்று விட்ட நீங்கள் பெரும் பாக்கியவான்.'' — காந்தி கூறினாள்.

''பாக்கியவான் எனச் சொல்கிறாயா? மகனுக்குத் துன்பம் கொடுக்கிறேனே என நான் தவிக்கிறேன், அம்மா'' என்று குரல் அடைக்கச் சீதாபதி கூறினார்.

''இது எதிர்பார்க்காத ஒன்று. உங்கள் மகனுக்குத் துன்பம் கொடுப்பதாக நீங்கள் நினைக்கக் கூடாது. அவர் வாழ்வில் நீங்கள் குறுக்கிடப் போவதில்லை. அவர்பாட்டுக்கு விவாகம் செய்து கொண்டு....''

''விவாகமா? அவனுக்கா?'' நெஞ்சு முட்டி வந்தது சீதாபதிக்கு.

''என்ன, அப்படிக் கேட்கிறீர்கள்? அவர் விவாகம் உங்களை ஒன்றும் பாதித்துவிடப் போவதில்லை.''

''ஐயோ! நீ தவறாகப் புரிந்து கொள்கிறாய், காந்தி. உன்னைப் பார்த்ததுமே என் மகள் போல் தோன்றிவிட்டதால் கூறுகிறேன். நான் அவன் விவாகத்துக்கான முயற்சிகளைச் செய்தேன். அவன் ஒரே பிடிவாதமாக விவாகமே வேண்டாமென்கிறான்.''

''காரணம்?''

''ஏதோ சொல்கிறான். காதலாம், தோல்வியாம்!'' சீதாபதி கூறிவிட்டார். ஒருகால் அவர் நினைத்தது போல் ஆனந்த் காந்தியைக் காதலித்துத் தோல்வி கண்டிருந்தால் அவள் மூலமே அது வெளிப்படலாம் அல்லவா?

''காதலில் தோல்வியா? இதென்ன இப்படிக் கூறுகிறீர்கள்? யாரைக் காதலித்தாராம்? எங்கே தோல்வியாம்?''

'அப்படியானால் இவளோடு சம்பந்தப்பட்டது இல்லையா? முன்பின் யோசியாமல் இவளிடம் கூறிவிட்டோமே!'

''இல்லை.... இல்லை.... விவாகமே வேண்டாம் என்று அவன் சொல்வதைக் கொண்டு நான் அப்படி ஊகிக்கிறேன்! உன்னைப் போல் ஒரு நல்ல பெண் கிடைத்தால் பண்ணிக் கொள்ளாமலா இருப்பான்?'' என்றவர் மனத்தில், 'இந்தப் பெண் வீட்டுக்கு மருமகளாக வந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! இவள் சம்மதம் தருவாளோ?' என்று பலவாறான எண்ணங்கள் ஓடின.

காந்தி முதலில் பதிலே கூறவில்லை. பிறகு, ''என்னைப் போல் ஒரு பெண் கிடைக்கக் கடவுள் அருள் புரியட்டும்'' என்று மட்டும் கூறினாள்.

காந்தி சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் புறப்பட்டாள்.

வழி நெடுக அவளுக்கு ஒரே யோசனை. காதலில் தோல்வி என்று முதலில் கூறினாரே சீதாபதி! ஆனந்த் யாரைக் காதலித்திருப்பார்? எப்படித் தோல்வி கிட்டி யிருக்கும்?

சீதாபதி அவளுக்குச் சம்மதம் இருக்குமா என்று மறைமுகமாகக் கேட்டு விட்டார். வாசுவைவிட ஆனந்த் எவ்வளவோ மேலானவர்தான். இருந்தாலும் இந்தப் பாழும் மனம் வாசுவை மறக்கச் சம்மதிக்குமா?

* * *

சினிமாவில் இடைவேளையின்போது வாசு கூறினான்: ''ரமா, ஆனந்த் மேல் நாடு போகப் போகிறானே!''




சினிமாப் படங்களில் மட்டும்தானே ''அடல்ட்ஸ் ஒன்லி'' என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம்?

இங்கே பம்பாயில் ''அடல்ட்ஸ் ஒன்லி'' நாடகங்கள் வர ஆரம்பித்து விட்டன. சமீபத்தில் ''சாண்டர்வோ'' என்னும் நாடகத்தைப் பார்க்க வயது வந்தவர்கள் மட்டும்தான் அனுமதிக்கப் பட்டார்கள்! தகவல்: 'ஜெயந்தி'

''அப்படியா! ரொம்ப சந்தோஷம்!''

''உன் சந்தோஷத்தோடு நிறுத்திக் கொண்டால் போதாது. நம் இருவர் விவாகத்தையும் சீக்கிரமே முடித்துக் கொள்ள வேண்டும். அவன் தந்தையை நம் பாதுகாப்பில் ஏற்பதாக வாக்களித்திருக்கிறேன்.''

''சரியான வாக்குதத்தம். ஆனந்த் நமக்கு எவ்வளவோ உதவி புரிந்திருக்கிறார். நாம் இச்சிறு உதவியாவது அவருக்குச் செய்ய வேண்டாமா?''

''பேச்சளவில் நின்று விடக் கூடாது. அம்மா வந்த போதும் பேச முடியவில்லை. நீயாகவும் அப்பாவிடம் சொல்லி இன்னும் ஏற்பாட்டை முடிக்கவில்லை!''

ரமா தலை குனிந்துவிட்டாள். அப்பாவின் போக்கை வாசுவிடம் சொல்லித் தப்பிவிட முடியுமா?

''ஆனந்த் விவாகம் செய்து கொண்டு தம்பதிகளாகக் கிளம்பினால் நன்றாக இருக்குமே! ஹனிமூனுக்குக்கூட இருக்குமே!'' பேச்சை மாற்றினாள் ரமா.

''அந்த மடையனிடம் நானும் சொல்லி விட்டேன். அன்று அவன் தந்தையிடம்கூடக் காந்தியைப் பற்றிப் பேசினேன்.''

''காந்தியைப் பற்றியா கூறினீர்கள்? வேண்டாம், இனிமேல் அவள் பேச்சை அங்கெல்லாம் எடுக்காதீர்கள்.''

''ஏன்?''

''காந்தியிடம் ஆனந்தைப் பற்றி நான் கூறப் போக அவளுக்குக் கோபம் வந்து விட்டது. நான்தான் முன்பே, அவள் யாரையோ மனத்தில் வைத்திருக்கிறாள் என்று கூறினேனே!''

வாசு ஏதோ கூற வந்தான். அதற்குள் மீண்டும் படம் ஆரம்பமாகி விட்டது.

* * *

''**வா**ருங்கள் மாமா!''

ரூபகுமார் கோசல்ராமை வரவேற்றான். கோசல்ராம் குளிர்பதன அறையிலிருந்த நாற்காலியில் அமர்ந்தார்.

''என்னப்பா, என் வீட்டுக்கு வருகிறேன் என்றவன் வராமலேயே இருந்து விட்டாயே! கடைசியில் உன்னுடைய வீட்டைத் தேடி என்னை வரும்படி செய்து விட்டாயே!''

''நான் அங்கு வந்திருந்தால் நீங்கள் இங்கே வந்திருப்பீர்களா?''

''ஏன், ரூபகுமார்! அஹமதாபாத் காகிதப் பேரத்திலே பங்கெடுக்கலாம் என்கிறாயா நீ?''

''யோசனை கேட்டுக் கொண்டிருப்பதிலேயே நீங்கள் காலத்தைத் தள்ளிக் கொண்டிருக்கிறீர்கள்.''

''எதையுமே யோசித்துத்தானே செய்ய வேண்டியிருக்கிறது.''

''உங்களுக்கும் எனக்கும் அதுதான் வித்தியாசம். நான் கடவுளின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டுக் கிளம்புகிறேன். நீங்களோ உங்களையே பெரிய சக்திமானாக நினைத்து யோசனையில் இறங்குகிறீர்கள். அதற்குள் நீங்கள் எதிர்பார்க்கும் வாய்ப்பே நழுவி விடுகிறது... யோசிக்கும் பொறுப்பையெல்லாம் ஆண்டவனிடம் ஒப்படைத்து விடுங்கள். அவர் வேலையில்லாமல், சும்மாத்தானே உட்கார்ந்திருக்கிறார்!''

ரூபகுமாரின் இந்த ஹாஸ்யம் கோசல்ராமுக்கு ரசிக்கவில்லை.

''ரூப குமார், அப்படியானால் நீ பாதி போடத் தயாராகி விட்டாயா?''

''எப்போதோ என் தீர்மானத்தைக் கூறிவிட்டேன்!''

''உன் நிபந்தனைதான் என்னை யோசிக்க வைக்கிறது.''

''அதற்கு நான் என்ன செய்வது? மாமா! நான் உங்கள் மருமகன் பதவியில் இருந்தால் உங்கள் பங்குகளை என் பெயருக்கு மாற்றும்படி சொல்லவே மாட்டேன். நான் உங்கள் பெயரில் பணம் போட்டுக் காகிதப் பேரத்தை ஆரம்பித்து விடுவேன்.''

''.........''

''பொய் எதற்கு, மாமா! கடைசியில் உங்கள் பங்குகள், வியாபாரம், பணம் எல்லாம் பெண்களுக்குத்தானே போகும்? ரமாவுக்காகச் செய்வதில் நான் ஏன் தயங்கப் போகிறேன்? வாசு காரணமாகத்தான் நான் உங்களுக்குப் பணம் கொடுக்க யோசிக்கிறேன்....''

''எனக்கு இரண்டு பெண்கள் இருக்கிறார்களே, ரூபகுமார்?''

''இந்த வம்பே எனக்கு வேண்டாம். வாசு பெரிய மருமகனாக இருந்து கொண்டு அதிகாரம் செலுத்த நான் அவன் கீழ் நிற்கும்படி என் தலையில் எழுதியிருக்கவில்லை. உங்களுக்கு வாசுவைக் கைவிட மனமில்லை என்றால் ஒன்று செய்யலாமே! எனக்கு ரமாவைக் கொடுத்து, காந்தியோடு அவன் விவாகத்தை நடத்தலாமே!''

கோசல்ராம் யோசனையில் ஆழ்ந்தார். 'ஆம்; அப்படியும் செய்யலாமே!'

''மாமா! நான் உங்களைக் கட்டாயப் படுத்தவில்லை.''

அவன் இதைக் கூறிக் கொண்டிருக்கும்போதே டெலிபோன் மணி அடித்தது. ரூபகுமாருக்கு எங்கிருந்தோ அழைப்பு வந்தது. **(தொடரும்)**

# ரகுபதி ராகவ

மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

## 19

மற்றவர்களைவிட எனக்குப் பிரத்தியேகமாகக் கடவுளுடைய சித்தம் வெளிப்பட்டதாக நான் எண்ணவில்லை. ஒவ்வொரு மனிதனுடைய உள்ளத்திலுமே தெய்வம் பேசுகிறது. நாம்தான் அது கேட்காதபடி காதைப் பொத்திக்கொள்கிறோம். நமக்கு முன்னால் ஒளிப் பிழம்பாக நிற்கும் அந்த ஜோதியைப் பார்க்காமல் கண்ணை மூடிக் கொள்ளுகிறோம். அவ்வளவேதான். நான் என்னைப் பற்றிச் சொல்லக் கூடியது என்னவென்றால் ஆண்டவன் எங்கும் பரவி நிற்கிறான் என்பதை உணர்ந்தேன். அவ்வளவே.

(யங் இந்தியா 25-5-21)

வாழ்க்கைப் பயன் ஆண்டவனைக் காண்பதுதான். மனிதனுடைய சகல காரியங்களும், எல்லாத் துறைகளிலும் ஆண்டவனைக் காணுவதற்கான முயற்சிகளாகவே இருக்க வேண்டும். சுற்றியுள்ளவர்களுக்கு உபகாரம் செய்து வாழும் வாழ்க்கை தெய்வ தரிசனம் பெறும் முயற்சியாகும். ஆண்டவன் படைத்திருக்கும் மக்களிலும் பிராணிகளிலும் அல்லாது வேறு எங்கே ஆண்டவனை நாம் காண்போம்? நம்முடைய உயிரைப் பிற உயிர்களில் ஒன்றுபடுத்திக் காண வேண்டும். பிற உயிர்களோடு தன் உயிரை ஒன்றுபடுத்துவது அந்த உயிர்களுக்குச் செய்யும் பணியிலேதான் முடியும். உலகத்தில் நான் ஒரு பிளவுபடாத பாகம். மக்கள் உயிரில்தான் நான் கடவுளைக் காண்கிறேன். அவன் வேறு; மக்கள் வேறு அல்ல. இந்தப் பெரிய உலகில் எனக்கு நெருங்கியிருப்பது என்னுடைய தாய் நாடு. இந்த நாட்டு மக்களின் நிலைமையைப் பார்த்தால் என்னுடைய பூரண முயற்சியும் அவர்களுக்குச் செய்ய வேண்டிய பணியில் செலுத்த வேண்டியதாயிருக்கிறது. ஆகையினால் என்னுடைய தெய்வ பக்தி இந்தத் துறையில் செல்கிறது. இமய பர்வதத்தில் ஒரு குகையில் ஆண்டவனைக் காண என்னால் முடிவதாயிருந்தால் அங்கேயே போய்த் தவம் செய்திருப்பேன். ஆனால் மக்களைத் தவிர்த்து மலையில் அவனை என்னால் காண முடியும் என்று நான் எண்ணவில்லை.

(ஹரிஜன் 29-8-36)

மெய்ப்பொருளை நாம் காண முடியாமல் இருப்பதும், அது மறைந்து நிற்பதும் நமக்கு நன்மையேயாகும். ஒரு சமயத்தில் ஒரே ஓர் அடி எடுத்து வைக்கத்தான் முடிகிறது. அதற்கு வேண்டிய வெளிச்சத்தைத்தான் தருகிறான். அது நமக்குப் போதும் அல்லவா? கிறிஸ்துவ கார்டினல் ந்யூமனுடன் நாமும் பாடலாம்: ''ஓர் அடி எடுத்து வைக்கிறேன். அது தவறிப் போகாமல் காத்துத் தா.'' பாதையில் ஓர் அடி சரியாக எடுத்து வைத்தோமானால் அடுத்த அடி எங்கே வைக்க வேண்டும் என்பது தானாக விளங்கும். அதைப் பற்றிச் சந்தேகமில்லை. பாதை இருட்டாக இருக்கிறது என்பது மாயை. பொறுமையைக் காத்தோமானால் வெளிச்சத்துக்குக் குறைவில்லை. படிப் படியாகச் செல்வோம். நடக்கும் பாதையில் அடி அடியாக வைத்துச் செல்லச் செல்ல வெளிச்சம் தருகிறான். அடுத்த படிக்கு அப்பால் இருக்கும் பாதை இருள் மூடினதாகக் காண்கிறது. அதற்காக நாம் பொறுமை இழந்து விடக்கூடாது.

(ஹரிஜன் 20-4-34)

நானும் நீயும் இந்த அறையில் உட்கார்ந்திருப்பது உறுதியல்லவா? அதைவிட உறுதி எனக்கு ஆண்டவன் இருப்பது. இன்னும் சொல்வேன்: காற்றும் நீரும் இல்லாமல் ஒருவேளை நான் பிழைத்திருப்பேன். ஆனால் தெய்வம் இன்றி என் உயிர் நிற்காது. என்னுடைய கண்களைப் பிடுங்கிவிடலாம். அது என்னைக் கொல்லாது. என் மூக்கை அரிந்துவிடலாம். அதுவும் என்னைக் கொல்லாது. ஆண்டவன் இருக்கிறான் என்கிற என் உறுதியைக் கெடுத்து விட்டீர்களானால் நான் செத்தேபோவேன். என்ன முரட்டு மூடத்தனம் என்று சொல்வீர்கள். ஆனால் இந்த மூட பக்தியை நான் அணைத்துக் கட்டிக்கொண்டு பிழைக்கிறேன். குழந்தைப் பருவத்தில் நான் இருட்டிலே நடக்க நேர்ந்தால் 'ராம் ராம்' என்று சொல்லிக் கொண்டே நடப்பேன். என்னை வளர்த்த ஒரு பாட்டியம்மை இதை எனக்குச் சொல்லித் தந்தாள். அதைப் போலவே தெய்வம் உண்டு என்கிற என்னுடைய இந்த மூட நம்பிக்கை.

(ஹரிஜன் 14-5-38)

ஆண்டவன் பெரும் சோதனைக்காரன். லேசில் விடமாட்டான். யாருமே அவனைப் போல் கண்டிப்புக் கிடையாது. என்னுடைய பக்தியோ தேகத்தின் சக்தியோ குறைந்து போனால் எப்படியோ அவன் வந்து உதவியும் செய்கிறான். நாம் எப்போதுமே அவன் திருவருளில் வைத்திருக்கும் நம்பிக்கையை இழக்கலாகாது என்று அடிக்கடி நிரூபிக்கிறான். எப்போதுமே அவன் நம்மைக் கைதூக்கிவிடக் காத்திருக்கிறான். ஆனால் நாம் சொன்ன வழியிலேதான் அவன் உதவ வேண்டும் என்று கோரினால் அது நடக்காது. இதை நான் நன்றாகக் கண்டுவிட்டேன். எந்தச் சமயத்திலும் அவன் என்னைக் கைவிட்டதில்லை. எல்லாம் போயிற்று என்று பயந்து போன கடைசி நேரத்தில் எப்படியோ அவனுடைய உதவி கிட்டியிருக்கிறது. (1933)

# ஸூப்பர் ஸர்ஃப் மூலம் ஒரே ஒரு சலவை மற்றெந்தப் பவுடரினாலும் செய்த 2 சலவைகளை விட அதிக வெண்மை






ஆராய்ச்சிக் கூட சோதனைகள்
பன்முறை நிரூபித்துள்ளன: போட்டியிடும் மிகச் சிறந்த
வேறெந்தப் பவுடரினாலும் இருமுறை சலவை செய்த
சட்டைகளை விட, ஸூப்பர் ஸர்ஃப் மூலம் ஒரே ஒரு தடவை
சலவை செய்த சட்டைகளுக்கே அதிக வெண்மை கிடைக்கிறது.
இரண்டாம் பட்சமான எதையும் ஏற்காதீர்கள்.
இந்தியாவின் தலைசிறந்த ரகம்: ஸூப்பர் ஸர்ஃப்.

## ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்!

(வெண்மையூட்டும் சாதனம் எதுவும் சேர்க்கத் தேவையில்லை).

லின்டாஸ்–SU.81.140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

# சாருலதா

## கி.ராஜேந்திரன்



### அத்தியாயம் 28

## தர்க்கமா? குதர்க்கமா?

ஏர்கண்டிஷன் செய்யப்பட்டிருந்த அறையானாலும் திடீரென்று புழுக்கமாக இருந்தது வேணுகோபாலுக்கு. வியர்த்துக் கொட்டி உடலெல்லாம் நனைந்து விட்டது.

''கிளம்பலாமா?'' என்று கேட்டான்.

''இந்தக் • கோலத்திலா?'' அவள் சிரித்தாள். ''கோமளா மறுபடியும் சாருலதாவாக மாற வேண்டும், வேணு! அப்புறம்தான் நான் வெளியே தலை காட்ட முடியும்!''

''சரி. நான் வாசலில் இருக்கிறேன். நீ உடை மாற்றிக் கொண்டு வா.''

வேணு இப்படி அவசரமாக வெளியேறியதைக் கண்டு அவள் சிறிதும் ஆச்சரியப்படவேயில்லை. ஆனாலும் அவள் கண்கள் கலங்கத்தான் செய்தன. அவ்விதம் தன் மனம் துயர் அடைவதினால் அவளுக்குக் கோபம் வேறு வந்தது. அதன் விளைவாக டிரெஸ்ஸிங் ரூம் சற்று நேரம் திமிலோகப்பட்டது.

வாசலுக்குப் போன வேணு கோட்டைக் கழற்றிப் பின் ஸீட்டில் போட்டான். டையைத் தளர்த்தி விட்டுக் கொண்டான். சாருலதா வரக் காத்திருந்த நேரத்தில் 'கார் பார்க்'கில் குறுக்கும் நெடுக்குமாக அலைந்தான்.

மவுண்ட்ரோட் இரவு நேரத்தில் ஜொலித்துக் கொண்டிருந்தது. பகல் போலவே சிரமமின்றிக் கார் ஓட்ட வசதியாகச் சாலைக்கு வெளிச்சம் போட்ட விளக்குகள் தவிர, பலப் பல நிறங்களில் விளம்பர விளக்குகள் ஒளிர்ந்தன. ஸாரிடோன் விளம்பரம் ஒன்றில் ஒரு கணம் ஒரு மனிதன் வாய் கிழியச் சிரித்தான். அடுத்த கணம் வேதனையுடன் முகம் சுளித்தான். தன்னைப் பார்த்துத்தான் அவன் கேலி செய்கிறானோ?

சாரு வந்தாள். கூர்க்கா கதவைத் திறந்து பிடித்தான். வேணுகோபால் காரைக் கிளப்பினான்.

''வீட்டுக்குத்தானே?''

''ஆமாம்.''

அண்ணா சிலையைச் சுற்றிக் கொண்டு சேப்பாக்கம் தாண்டி பீச் சாலையோடு சென்றது கார். மௌனம் நீடிப்பதைப் பொறுக்க முடியாமல், ''ஐ ஆம் ஸாரி வேணு!'' என்றாள் சாருலதா.

''அழகுதான், எதற்காக நீ என்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்?''

'' நீங்கள் உருவாக்கி வைத்திருந்த சாருலதா 'இமேஜ்'ஜை உடைத்துவிட்டேன் இல்லையா?''

''அசல் சாருலதாவே பக்கத்தில் இருக்கும்போது மனக் கண்ணாடியில் கண்ட பிம்பத்தைப் பற்றி யாரேனும் கவலைப்படுவார்களா?''

''உண்மை சொருபத்தைவிட நீங்கள் சிருஷ்டித்திருந்த பிம்பம் இன்னும் அழகாக இருந்ததல்லவா?''

''அது இனிமேல்தான் எனக்குப் புரிய வேண்டும்.''

'' என்ன சந்தேகம் உங்களுக்கு? கேளுங்கள்!''

''உன்னை பிளாக்மெய்ல் செய்ய வருகிறார்களே, இருவர்? அவர்கள் 'புனிதமான கங்கை நதிக் கரையில் யாரேனும் பாபம் புரியத் துணிவார்களா?' என்று உன்னைக் கேட்கச் சொன்னார்கள் இல்லையா? இதன் பின்னர்தானே அவர்களைச் சந்தித்துப் பேச நீ சம்மதித்தாய்?''

''ஆமாம்.''

''அதற்கென்ன அர்த்தம்?''

''பணத்துக்காக ஆசைப்பட்டு நான் கிழவனைக் கல்யாணம் செய்துகொண்டதாக அவர்கள் நினைக்கிறார்கள்.''

''அது எவ்வளவு தூரம் உண்மை?''

''திருமணம் ஆகும்வரை எனக்குப் பணத்தாசை இருக்கவில்லை. அப்பாவை வழிக்குக் கொண்டுவர பாங்கு பாஸ் புத்தகத்தை நான் பார்த்ததாகப் புளுகினேன். லட்சக்கணக்கில் அவரிடம் கையிருப்பு உள்ளதாகச் சொல்லிச் செல்வத்தில் மயங்கியது போல் நடித்தேன்.''

''ஆக, குழந்தைப் பேற்றைத் தவிர்க்கலாம் என்ற ஒரே காரணத்துக்காகத்தான் நீ கிழவனைக் கல்யாணம் செய்து கொண்டாய்.''

''கல்யாணம் ஆகும்வரை அந்த ஓர் எண்ணம்தான்; ஆனால் பின்னால் என்னைப் பணத்தாசையும் பிடித்துக் கொண்டு விட்டது. கணவனைக் காதலிக்க முடியாமல் நான் அவரிடம் இருந்த பணத்தின்மீது காதல் கொண்டேன்!''

''ஷாக்கிங்!''

''மீச்சத்தையும் கேளுங்கள்! சிலருக்கு விஸ்கியும் ஜின்னும் அருந்தினால் போதை ஏற்படுகிறதே, அப்படி எனக்குப் பணம் பண்ணுவதில் போதை உண்டாகிறது! என் அழகு, தொழில் வர்த்தகத் துறையில் பல காரியங்களைச் சுலபமாக்கி மேலும் மேலும் செல்வம் திரட்ட எளிதாக உதவுவதைப் பார்க்கும்போது கர்வம் ஏற்படுகிறது. ஓட்டு வீட்டில் வசித்த நான் இன்று எட்டாவது மாடியிலிருந்து எட்டிப் பார்க்கும் போது அகம்பாவம் உண்டாகிறது!''

''இதனாலெல்லாம்தான் உன் தம்பி உன்னை மதிக்க மாட்டேனென்கிறான்.''

''என்னை மதிக்க வேண்டாம்; பணத்தை மதிக்கக் கூடாதா?''

''ஏதேதோ மோசடிகள் செய்து நீ பணம் பண்ணுவதைக் கண்டு அவனுக்குப் பணத்தின்மீதே வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது.''

''போதாக்குறைக்கு அக்காவாகிய நான் கன்னிப் பெண்ணாக வேறு நடிப்பதால் அவன் கல்யாணத்துக்கு இடையூறாக வேறு நிற்கிறேன். விதவைக் கோலத்தை நான் மறைக்காமல் இருந்தால் இந்நேரம் இரண்டு குழந்தைகளுக்குத் தந்தையாகி யிருப்பான்!''

''அல்லது நீ மறுமணம் புரிந்து கொண்டாவது அவனுக்கும் கமலாவுக்கும் கல்யாணம் நடக்க வழி செய்யலாம்.''

''இரண்டும் நடக்காத காரியங்கள்.''

''என்ன ஆச்சரியம் பார், சாரு! உன் பணப் பித்தை வெறுக்கும் குணசீலனால் உன்னை வெறுக்க முடியவில்லை! நீ நடந்து கொள்ளும்விதம் பிடிக்காமல் வீட்டை விட்டு வெளியேறும் அளவுக்கு அவனுக்கு நெஞ்சுறுதி இருக்கிறது. ஆனால் அக்காவின் வாழ்க்கைப் பிரச்னை தீராத முன்னர் தன் கல்யாணத்தை நடத்திக் கொள்ளத் தைரியம் இல்லை! பாசம்! அது அவனை அப்படிப் பாடாய்ப் படுத்துகிறது!''

''அதற்கு இன்னொரு பெயர் மூட்டாள்தனம்!''

''உணர்ச்சிகளைக் கொன்று வாழ நினைக்கிற உனக்கு உன் அப்பாவின் போக்கும் மடத்தனமாகத்தான் தோன்றுகிறதோ? இவ்வளவு சிக்கல்களையும் சகிக்க மாட்டாமல் வீட்டிலேயே ரிஷிகேசத்தைச் சிருஷ்டித்துக் கொண்டு காலத்தை ஓட்டுகிறாரே அவர்!''

''இமயமலைச் சாரலுக்கே போய்விட அவருக்கு ஆசைதான். என்னைத் தனியாக விட்டு விட்டுப் போகத் தயக்கம். எவ்வளவுதான் நான் 'மாடர்ன்' ஆனாலும் அவருக்கு நான் மகள்தானே? குணசீலனிடம் என்னை ஒப்படைத்துவிட்டுப் போகவும் பயம். அவனிடம் நம்பிக்கை இல்லை.''

''ஆமாம், திடீரென்று அவன் உன் மீதோ அல்லது உன்னிடமுள்ள பணத்தின் மீதோ கோபித்துக் கொண்டு வீட்டை விட்டுப் போய் விடலாம் அல்லவா? அந்த விதமாகத்தானே நடந்து கொள்கிறான் அவன்? உனக்கு அப்போதே நல்ல புத்தி சொல்லிப் பெருமாள் உன் கல்யாணத்தைத் தடுத்திருக்கலாம்.''

''அதைச் செய்யாது போனேமே என்று வருத்தப்பட்டுத்தான் பிராயச்சித்தமாகப் பகவான் நாமாவைத் தவிர வேறு எதையும் கூறுவதில்லை என்று விரதம் எடுத்துக் கொண்டிருக்கிறார். நான் இளம் வயதிலேயே விதவையான தற்குத் தானும் ஒரு காரணம் என்று அவர் நினைக்கிறார்.''

சாருலதாவின் வீடு வந்து விட்டது. காரிலிருந்து கீழே இறங்கினார்கள்.

''குட் நைட் சாரு'' என்றான் அவன்.

''என்ன அவசரம்? நாளை முதல் உங்களை இப்படி அடிக்கடி சந்திக்க முடியாதே? ஆபீஸில் ஆளை விழுங்கும் அளவுக்கு வேலைகள் இருக்கும்.'' அவள் அவன் அருகில் வந்து நின்றாள்.

அமைதி சூழ்ந்திருந்தது. வீட்டின் வாசல்

அறையில் மட்டும் எரிந்த விளக்கின் ஒளி தோட்டத்தில் படிந்திருந்த நிலவுப் போர்வையின் காந்திக்கு முன்னால் மங்கிப் போயிற்று. அவர்கள் நின்ற இடத்திலிருந்து பார்த்தபோது தென்னங் கீற்றுக்களை ஆடையாகக் கொண்ட முழுமதி, அதனால் மறைக்கப் பட்டும் மறையாமல் காட்சி தந்து இன்ப வெறியூட்டியது. இருவாட்சியின் மணம் கம்மென்று எழுந்து உண்மையாகவே அந்த இரவை ஆட்சி புரிந்து கொண்டிருந்தது.

''வேணு! உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும், நான். பிடிவாதமாகப் போராடி என் கதையை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டீர்கள். என் மனம் எவ்வளவு இலேசாகி யிருக்கிறது தெரியுமா? பிடித்துக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் கனம் குறைந்திருப்பதால் இந்த நிலவு வெள்ளத்தில் மிதந்து நான் உயரே போய்விடுவேன்!'' சிரித்தபடியே அவனது வலக் கரத்தை வலியச் சென்று பற்றினாள் சாருலதா.




TVS



''உன்னை விட்டு ஓடிய மனச் சுமை வேறு உருவத்தில் என் நெஞ்சில் குடியேறி விட்டது சாரு!''

''உங்களுக்கென்ன கவலை?''

''என் அம்மாவைப் பற்றி. அவளை எப்படிச் சமாளிப்பது? மடியில் போட்டுக் கொஞ்சப் பேரக் குழந்தை இல்லையே என்று அவள் ஏங்கினால் அது ஆண்டவன் செயல் என்று சமாதானம் சொல்லித் தப்பிக்கலாம். வரப் போகும் நாட்டுப் பெண்ணுக்கு இத்தனை வயதாகி விட்டதே என்றால் எனக்கும் அப்படி ஒன்றும் யௌவன வயதில்லை என்று சுட்டிக் காட்டலாம். ஆனால் இதை எப்படிச் சொல்லி எவ்வாறு சம்மதம் வாங்குவது?''

வேணுகோபாலின் கரத்தை உதறியது போல் நழுவ விட்டாள் சாருலதா. ''ஆமாம்; விதவை என்ற சொல்லை உச்சரிக்கவே கூசி, 'இதை' என்று குறிப்பிடும் உங்களுக்கு இந்த விஷயமாக அம்மாவிடம் பேசத் தைரியம் வராது தான்!''

''குதர்க்க வாதம் பண்ணத்தான் உனக்கு எப்போதுமே பிடிக்கும்.''

''தர்க்க ரீதியாகவே கேட்கிறேன்: ஏதோ நான் உங்களைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சம்மதமளித்துவிட்டது போலல்லவா நீங்கள் உங்கள் அம்மாவைச் சமாளிப்பது பற்றிப் பேசுகிறீர்கள்?''

''சாரு!''

''கவலைப் படாதீர்கள்! உங்கள் அம்மாபேரில் பழியைப் போட்டு நீங்கள் தப்பித்துக் கொள்ள வேண்டிய சங்கடமான நிலையை உங்களுக்கு நான் ஏற்படுத்தப் போவதில்லை.'' இவ்வாறு கூறி விட்டுச் சாருலதா வாசற் படிகளைக் கடந்து உள்ளே போய்விட்டாள்.

## அத்தியாயம் 29

# சுதந்திரப் பறவை!

பத்து நாட்களுக்குப் பிறகு 'சாருலதா என்டர்பிரைஸஸ் — சேர்மன்ஸ் ஆபீ'ஸுக்குள் அதன் தலைவி நுழைந்த போது அங்கு பணியாற்றிய சுமார் இருபது இருபத்தைந்து பேர்களும் ராணுவ மரியாதை அணிவகுப்பு போன்று வரிசையாக நிற்பதைக் கண்டு ஆச்சரியப் பட்டாள். அவள் முன்வாசலைக் கடந்து வந்ததும் எல்லாருமாகச் சேர்ந்து ஐந்து விநாடிகளுக்குக் கைதட்டினார்கள். அனைவருக்கும் முன்னால் நின்றவள் லில்லி. ஆகவே, ''என்ன இதெல்லாம்?'' என்று சாரு கேட்டதும் பதில் சொன்னவளும் லில்லிதான்:

''நீங்கள் உடம்பு நன்றாகக் குணமாகித் திரும்பியதில் எங்களுக்குள்ள மகிழ்ச்சியைத் தெரிவிக்கத்தான் இந்த ஏற்பாடு.''

சாருலதாவுக்கு உள்ளம் நெகிழ்ந்தது. ஆனால் அதை வெளியே காண்பித்துக் கொள்ளாமல், நன்றி கூறாமல், ''பூமாலை ஒன்றுதான் பாக்கி'' என்றாள். ஓரளவு மகிழ்ச்சியைக் காண்பித்துக் கொள்கிற மாதிரியும் கொஞ்சம் கேலியாகவும் இப்படிக் கூறினாள்.

''நான் சொன்னேனுங்க, பூமாலை வாங்கிப் போடணும் அம்மாவுக்குன்னு. குமார்தான் வேண்டான்னுட்டாரு!''— பியூன் வேதாசலம் குற்றம் சாட்டுவது போல் பேசினான்.

''அது ரொம்ப ஃபார்மலாகப் போய் விடும் என்று நினைத்தேன்'' என்றான் குமார், தயக்கமும், பயமுமாக. ஒரு வேளை மலர்மாலை வரவேற்பைச் சாருலதா விரும்பி ஏற்றிருப்பாளோ என்று அவனுக்குச் சந்தேகம் வந்துவிட்டது!

''தேங்க் காட்! தத்துப் பித்தென்று அப்படி ஒரு காரியம் பண்ணாமல் இருந்தீர்களே! பத்து நாட்கள் லீவுக்குப் பிறகு ஆபீசுக்கு வந்தால் அதற்கு இப்படி ஓர் ஆர்ப்பாட்டமா?''

''வி மிஸ்ட் யூ சாரு! காரியாலயம் வெறிச்சென்றிருந்தது'' என்றாள் லில்லி.

இதற்குப் பதில் கூறாமல் சாரு மேலே நடந்தாள். அந்த வரிசையில் சாரங்கன் இல்லை என்பதை அவள் இதற்குள் கவனித்திருந்தாள். தன் அறைக்குள் சென்றதும், ''சாரங்கன் எங்கே? வரச் சொல்லு'' என்றாள் வேதாசலத்திடம்.

இந்த அழைப்பை எதிர்பார்த்துத் தயாராகக் காத்திருந்த சாரங்கன், பியூன் வெளியேறிய மறுகணமே உள்ளே நுழைந்தான்.

''எங்கே கார்ட் ஆஃப் ஆனரில் உங்களைக் காணோம்?'' என்றாள் சாருலதா கிண்டலாக.

''நான் அங்கு நின்றால் உங்களுக்குப் பிடிக்காது. அங்கு மட்டுமென்ன? இந்தக் காரியாலயத்தில் நான் எங்கு நின்றாலும் உங்களுக்குப் பிடிக்காது. அதனால் ராஜினாமாக் கடிதம் தயாராக வைத்திருக்கிறேன்.'' பாக்கெட்டிலிருந்து ஓர் உறையை எடுத்து நீட்டினான் அவன்.

சாரு அதை வாங்கிப் பிரித்துக்கூடப் பார்க்காமல் கிழித்துக் குப்பைத் தொட்டியில் போட்டான். ''வேணு கோபால் எனக்கு எல்லாம் சொன்னார். டோண்ட் வொர்ரி; கேரி ஆன்!''

''அதற்கில்லே சாரு...''

அவன் இடைமறித்தான். ''நீங்கள் என் நலனைக் கருதித்தான் வேணுவிடம் பேசினீர்கள்; அவர் சொற்படி நடந்தீர்கள். லெட் அஸ் ஃபர்கெட் இட்!''

''மறந்துவிடுவது அவ்வளவு சுலபமா? நாளைக்கு ஏதாவது அந்தரங்கமான கம்பெனி விவகாரத்தை என்னிடம் ஒப்படைக்க நீங்கள் முற்படும்போது, இவனை நம்பலாமா என்ற எண்ணம் உங்களுக்கு எழாதா? இதை இவன் வேறு யாரிடமாவது உளறிக் கொட்டி வைத்தால் என்ன செய்வது என்று சந்தேகப்படமாட்டீர்களா?''

''மாட்டேன். இன்ஃபாக்ட் நீங்கள் என்னைப் பற்றி வேணுவிடம் பேசியதில் எனக்கு மகிழ்ச்சிதான்.''

''நிஜமாகவா?''

''ஆமாம். உங்களுக்குத் தெரியாத விஷயமல்ல — வேணு லவ்ஸ் மி. ஆனால் அந்தக் காதலை ஏற்க முடியாத நிலையில் நான் இருக்கிறேன். ஏன் அப்படி என்ற விவரங்களை அவரிடம் சொல்லத் தயங்கித் தவித்துக் கொண்டிருந்தேன். ஆனால் இப்போது மனம் விட்டு அவரிடம் பேசியாகி விட்டது. அதற்கு வழி ஏற்படுத்திக் கொடுத்தீர்கள். வேணுவிடம் எந்த ரகசியத்தையும் நான் ஒளிக்கவில்லை என்பதால் என் உள்ளம் இலேசாகி யிருக்கிறது. கவலை இன்றிச் சுதந்திரமாகப் பறக்கும் பறவைபோல ஒரு குதூகல உணர்ச்சி. தாங்க்ஸ் டு யூ!''

ஓரிரு விநாடிகளுக்குப் பிறகு சாரங்கன் பேசினான்: ''இதற்கு நான் என்ன பதில் சொல்ல முடியும்? ஐ ஆம் கிரேட்ஃபுல்.''

''நன்றி காட்டுவதுடன் விசுவாசமாகவும் இருப்பீர்கள், எனக்குத் தெரியும். சரி, ஒருவரை ஒருவர் தட்டிக் கொடுத்துக் கொண்டது போதும்; காரியங்களைக் கவனிப்போம்.'' சாருலதா இப்படிச் சொல்லிவிட்டு மேஜை எதிரே அமர்ந்தாள். அவளுக்கு முன்னால் அடுக்கி வைக்கப்பட்டிருந்த ஃபைல்களை ஒவ்வொன்றாக எடுத்துப் பார்த்தாள்.

முழுவதும் படிக்க வேண்டிய அவசியமில்லாதபடி ஒவ்வொரு ஃபைலிலும் உள்ள பிரச்னையைச் சுருக்கிச் சொன்னான் சாரங்கன். மேலே எடுக்க வேண்டிய நடவடிக்கையைச் சாருலதா கூறவும் அதைத் தன் பாக்கெட் டேப் ரிக்கார்டரில் வழக்கம்போல் பதிவு செய்து கொண்டான். சில ஃபைல்களில் சாருலதா நோட்ஸ் எழுதினாள். ''இதைக் கைலாசத்திடம் அனுப்பி விடுங்கள்—அவர் கவனிப்பார்; இதைச் சாருலதா ஸெமென்ட்ஸ் ஜனார்த்தனனுக்கு அனுப்புங்கள்'' என்று இப்படிப் பலர் மீது பொறுப்புக்களைச் சுமத்தினாள்.

ஏழாவது ஃபைலை அவள் ஆராய்ந்து கொண்டிருந்தபோது டெலிபோன் மணி அடித்தது. சாரங்கன் எடுத்தான்.

லில்லியின் குரலில் கலக்கம் தொனித்தது. ''மஹிபாலும் சந்திரபாலும் வந்திருக்கிறார்களே, என்ன செய்யட்டும்?'' பரபரப்புடன் அவள் கேட்டாள். ''இவர்களை அதிக நேரம் தாமதிக்கச் செய்ய என்னால் முடியாது!''

''என் அறைக்கு அழைத்துப் போ, லில்லி. நான் இதோ வருகிறேன்.''

''யார் அது?'' என்று சாருலதா கேட்டாள்.

''உங்களுக்கு இப்போது அந்தக் கவலை வேறு வேண்டாம். 'உடம்பு சரியில்லை, சாருவுக்கு. பத்து நாட்களுக்குப் பிறகு வாருங்கள்' என்று சொல்லி அனுப்பி விடுகிறேன்.''

சாருலதா புரிந்து கொண்டாள். ''நோ, நோ! ஐ ஆம் ஆல்ரைட்! யார், மஹிபால், சந்திரபால்தானே? வரச் சொல்லுங்கள்!''

சற்று நேரத்தில் அவர்கள் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தார்கள். ''கம் இன், கம் இன்! என்ன தயக்கம்?'' என்றாள் சாருலதா. கதவு மூடிக் கொண்டதும், ''வழக்கம்போல் பிளாக் மெய்ல் செய்யத்தானே வந்திருக்கிறீர்கள்? உட்காருங்கள்'' என்று சொல்லி உபசரித்தாள்.

இந்த வரவேற்பு அவர்கள் எதிர்பாராத ஒன்று. அடித்துப் பேச வந்தவர்களைக் குழைந்து கேட்க வைத்தது அது. ''அவசரமாகப் பத்தாயிரம் ரூபாய் தேவை. அதனால்தான் வந்தோம்.''

''அடிக்கடி உன்னைத் தொந்தரவு செய்ய வேண்டி யிருக்கிறது. ஆனால் வேறு வழியில்லை.''

''பத்தாயிரம் தர முடியாது என்றால்?''

சாருலதா இப்படிக் கேட்டதும் அடங்கியிருந்தவர்களுக்குத் திடீரென்று ஆத்திரம் வந்தது. ''விளையாடுகிறாயா சாரு? பணம் தர முடியாது என்றால் என்ன நடக்கும் என்று உனக்கே தெரியும்!''

''உன்னிடம் காட்டிய போட்டோவின் ஒரிஜினல் நெகடிவ் ஒரு பாங்கில்

ஸேஃப் டெபாஸிட் வால்ட்டில் பத்திரமாக இருக்கிறது. மறக்காதே!''

சாரு சிரித்தாள். ''பயந்து போனீர்களா என்ன? 'பத்தாயிரம் தர மாட்டேன் பதினையாயிரமாகத் தருகிறேன்' என்று சொல்ல வந்தேன். அதற்குள் பயப்படுகிறீர்களே!''

''நீ அசட்டுத்தனமாக நடந்து கொள்ள மாட்டாய் என்று எங்களுக்குத் தெரியும்!''

''பதினைந்து நாட்கள் கழித்து வாருங்கள். பதினையாயிரம் தருகிறேன்.''

பத்தாயிரம் கேட்டு வந்தவர்கள் பதினையாயிரத்துக்கு உறுதி மொழி பெற்றுச் சென்றனர். சாரங்கன் கேட்டான்: ''என்ன இது, இந்த அயோக்கியர்களை அடித்து விரட்டாமல் ஆதரவு காட்டுகிறீர்கள்? இப்படி 'என்கரேஜ்' பண்ணலாமா?''

''சாரங்கன்! பதினையாயிரம் என்ன பெரிய விஷயம்? நடப்பு ஆண்டில் பதினைந்து லட்சம் சம்பாதித்துக் காட்டுகிறேன், பாருங்கள்! இப்போ பணம் பண்ணுகிற 'மூட்' எனக்கு!'' அவளிடம் காணப்பட்ட இந்தப் புதிய உற்சாகம் அவனைத் திணற அடித்தது. சற்று முன் அவள் சொன்னது போல் மனச் சுமை இறங்கிவிட்டதால் ஏற்பட்ட புத்துணர்ச்சியா இது?

''மேலே வேலைகளைக் கவனிப்போமா?'' என்று கேட்டு மளமளவென்று ஏழெட்டு ஃபைல்களைப் பைசல் செய்தாள் சாருலதா.

அடுத்ததாக அவள் கையிலெடுத்த ஃபைலின் மீது 'பரத்வாஜ் அண்டு கம்பெனி' என்று எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததுமே ''எப்படி இருக்கிறது? எனி இம்ப்ரூவ்மெண்ட்?'' என்று கேட்டாள்; பிரிக்கவில்லை.

''முன்னேற்றம் இல்லாமல் இல்லை; ஆனால் கூடவே ஏகப்பட்ட பிரச்னைகளும் முளைக்கின்றனவே?''

''புதிதாக நம் வசம் வந்த கம்பெனியின் பிரச்னைகளை ஃபைலைப் பார்த்துத் தெரிந்து கொள்வதை விட நேரடியாகப் போய்ப் புரிந்து கொள்வதுதான் நல்லது. வண்டியை எடுக்கச் சொல்லுங்கள்.''

''நாலு நாளைக்கு நீங்கள் அதிகமாக அலைய வேண்டாமே. தொழிற்சாலையிலிருந்து மானேஜர், ஃபோர்மென் முதலியவர்களை இங்கு வரச் செய்கிறேன். இங்கேயே 'டிஸ்கஸ்' பண்ணலாமே?''



''உங்க ஆபீஸ் லட்சுமிகரமாக விளங்குறேது என்று கேள்விப்பட்டேன்.''

''ஆமாம். ஜெயலட்சுமி, கஜலட்சுமி, சந்தானலட்சுமி, பாக்கியலட்சுமி, தனலட்சுமி, ஆனந்தலட்சுமி ஆகியோருக்கு உத்தியோகம் கொடுத்து விட்டேன்!''

''நோ! நோ! அது பிரயோஜனப்படாது. தொழில் துறை வெற்றிக்கு அடிப்படைத் தேவை என்ன தெரியுமா, சாரங்கன்? பிரச்னைகளை அணுகித் தீர்ப்பது மட்டுமில்லை; என்னென்ன பிரச்னைகள் உருவாகலாம் என்று முன் கூட்டியே ஊகித்தறிந்து அவற்றைத் தவிர்க்க முன்னேற்பாடுகளைச் செய்ய வேண்டும். அதற்குத் தொழிலை நன்கு அறிந்திருக்க வேண்டும். ஃபைல்களைக் கட்டிக் கொண்டு அழுதால் தொழிலைத் தெரிந்து கொள்ள முடியாது!''

சாரங்கன் மேலே வாதாடாமல் போர்டிகோவில் கார் தயாராக நிற்க ஏற்பாடு செய்தான்.

''நீங்கள் என்னோடு வர வேண்டிய அவசியமில்லை. நான் சொல்லியிருக்கிற காரியங்களைக் கவனியுங்கள். சாயந்திரம் நேரமிருந்தால் இந்தப் பக்கம் வந்து எட்டிப் பார்த்து விட்டுப் போகிறேன். இல்லையானால் நாளைக்குத்தான்.''

சாருலதா சென்ற பிறகு சாரங்கன் தன் அறைக்குத் திரும்பினான். அவளிடம் காணப்பட்ட சுறுசுறுப்பு அவனிடமும் தொத்திக் கொண்டிருந்தது. கிடுகிடுவென்று அவளுடைய உத்தரவுகளை நிறைவேற்றக் கருதி, அந்த உத்தரவுகள் பதிவாகியிருந்த டேப் ரிகார்டரை இயக்கினான்.

''வழக்கம்போல் ப்ளாக்மெய்ல் செய்யத்தானே வந்திருக்கிறீர்கள்?'' — சாருலதாவின் குரல் டேப் ரிகார்டரில் ஒலித்ததும் சாரங்கனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'மஹிபாலும் சந்திரபாலும் வந்திருந்தபோது ரிகார்டரை நிறுத்த மறந்துவிட்டேன் போலும்!'

ரிகார்டர் மேலும் பேசியது: ''பத்தாயிரம் தர முடியாது என்றால்...?''

''விளையாடுகிறாயா சாரு? பணம் தர முடியாது என்றால் என்ன நடக்கும் என்று உனக்கே தெரியும்!''

சாரங்கன் அவசரம் அவசரமாக ரிகார்டரை நிறுத்தினான், அக்கம் பக்கத்து அறைகளில் இருப்பவர்களின் காதில் விழுந்து வைக்கப் போகிறதே என்று பயந்தவனாக. (தொடரும்)

**கார்ன் ப்ராடக்ட்ஸ் தேர்ந்தெடுத்த பரிசு பெற்ற பக்குவ முறை**

# பூசனி

அனுப்பியவர்: திருமதி ஹேஸல் ட்ரேகோ,

# பிரவுன் & போல்ஸன்

## கஸ்டர்டு பவுடர் கொண்டு தயாரிக்கப்பட்டது



பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் மென்மையானது, செழுமையானது, சத்தானது. பிர்னி, ஐஸ்க்ரீம், ட்ரிபிள் போன்ற பல வகைப் புட்டிங்குகளையும், பழவகைத் தின்பண்டங்களையும் தயாரிக்க அது எப்போதும் கைவசமிருக்கட்டும். தவிர, ஜெல்லி, ஃப்ரூட் ஸாலட்டுகளுடன் சேர்க்கும்போது இன்சுவை பெருகும். அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்ட பிரவுன் & போல்ஸன் கிடைக்கும் கஸ்டர்டு பவுடர்களில் மிகவும் சிறந்தது.

பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் சைவ உணவுக்குக் குந்தக மற்றது—முட்டை கலவாதது.



# புட்டிங்

26, ஈஸ்ட் பாலி, பாந்த்ரா, பம்பாய்—50

**பக்குவ முறை:**

1 கிலோ துருவிய வெள்ளைப் பூசனி (சுரைக்காய்)
½ டீஸ்பூன் ஏலக்காய்ப் பொடி
170-200 கி. சர்க்கரை
பச்சை கலர்ப் பொடி (உண்ணக் கூடியது)
1 டேபிள் ஸ்பூன் வெண்ணெ
50 கி. பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர்
½ லிட்டர் பால்
3 டேபிள் ஸ்பூன் சிறிதாக நறுக்கிய முந்திரிப் பருப்பு
வெனில்லா எஸென்ஸ்
1 டீஸ்பூன் நறுக்கிய பிஸ்தா பருப்பு
அலங்காரமாக வைக்க சில செர்ரிகள்

1. பூசனியை மென்மையாகும் வரை சமைக்கவும். ஏலப்பொடியையும், 100-125 கி. சர்க்கரையையும் சேர்க்கவும்; மீண்டும் நீர் வற்றும் வரை வேக விடவும். கலர்ப் பொடியையும் வெண்ணெயையும் சேர்க்கவும்.

2. சிறிது குளிர்ந்த பாலில் பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடரைக் கலக்கவும். 70—75 கி. சர்க்கரையை முந்திரிப் பருப்புடன் எஞ்சிய பாலுடன் சேர்க்கவும். கஸ்டர்டு பவுடர் கலவையை சேர்த்து, கெட்டியாகும் வரை கிளறவும். வனில்லா எஸென்ஸைச் சேர்க்கவும்.

3. ஜெல்லி ரிங் மௌல்டில் வெண்ணெ தடவி, பிஸ்தாவை தெளிக்கவும். கஸ்டர்டு கலவையை ஒரு அடுக்கு வைத்து, பிறகு ஒரு அடுக்கு இனிப்பாக்கிய பூசனியை வைக்கவும் (அலங்காரமாகத் தூவ கொஞ்சம் தனியாக எடுத்து வைத்துக் கொள்ளவும்). இப்படியே அடுக்குகளாக வைத்துக்கொண்டு வந்து, இறுதியில் கஸ்டர்டு அடுக்குடன் முடிக்கவும். குளிர விடவும்.

4. பரிமாறும் பாத்திரத்திற்கு மாற்றி, செர்ரியினும் அலங்கரித்து, எஞ்சிய பூசனியைத் தூவவும்.

இலவசம்! புதிய பக்குவமுறை புத்தகம் நெம். 2. இன்றே ஒரு பிரதிக்கு எழுதுங்கள்:-

தயவு செய்து எனக்கு ஒரு பக்குவமுறை செட்டை ஆங்கிலம் / இந்தி / வங்காளம் / தமிழ் / தெலுங்கு / மலயாளம் / குஜராத்தி / மாராத்தி / கன்னடத்தில் இலவசமாக அனுப்பி வைக்கவும்.

பெயர்____________________ முகவரி__________

---

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:
பப்ளிஸிடி டிபார்ட்மெண்ட், கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரை. லிட்
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பிஆர்). K-4

இதுபோல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின்வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரைவேட் லிட்.**

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், சென்னை-1. மற்றும் அவர்களது கிளைகள்

Bensons/3608 TM

அட்டைப் படக்கதை

# உணர்வின் மலர்ச்சி

இப்படி வகையாக வெளிநாடு செல்லும் வாய்ப்புக் கிட்டும் என்று சீதா நினைத்ததில்லைதான். என்னதான் அவள் 'லோயின்டி — கேடட்' என்றாலும் படிப்பு என்றோ, பதவி என்றோ இதுவரை வெளிநாடு போகச் சந்தர்ப்பம் கிடைத்ததேயில்லை. இப்போது எதிர்பாராத விதமாக அது வாய்த்து விட்டது.

இந்தியக் கைத்தொழில் கழகம் அவளை , லண்டனில் நடக்கப் போகும் எக்ஸிபிஷனில் தங்கள் பெவிலியனுக்காக அனுப்பத் தீர்மானித்தது.

முதல் நாள் கோலாகலமான வரவேற்பிடையே இந்திய பெவிலியனின் மூங்கிலால் செய்யப்பட்ட வரவேற்பு வளைவுகள் அனைவரையும் கவர்ந்தன. விஞ்ஞான அதிசயங்கள் இந்த உலகையே நிறைத்துக் கிடந்தாலும், வெறும் மனிதனின் கைவிரல்களால் உருவாகும் நுட்பமான வேலைகளுக்கும் ஒரு தனி மவுசு உண்டாகவே செய்கிறது. நடராஜர் சிலை, யானைத் தந்தம், காஷ்மீர்க் கம்பளங்கள், விதம் விதமான பொம்மைகள், வண்ணச் சித்திரங்கள் தீட்டப்பட்ட மண், பித்தளைப் பாத்திரங்கள், நகாசும், மெருகும் தரப்பட்ட வெள்ளிப் பாத்திரங்கள், தெட்டியால் செய்யப்பட்ட தாஜ்மஹால், தமிழ் நாட்டுக் கோயில், கைத்தறித் துணிகள் எல்லாமே சிறந்த வியாபாரத்துக்குரிய வரவேற்பைப் பெற்றன.

ஒரு வாரம் கழிந்தது.

பெவிலியன் வாயிலுக்குச் சற்றுத் தள்ளி உட்புறத்தில் பாங்குறப் புடவையணிந்த உயரமான பெண் சிலை ஒன்று இருந்தது. அதன் அருகே நின்ற சீதா புடவைகட்டும் விதத்தை பிரிட்டிஷ் பெண்களுக்கு விளக்கிக் கூறிக் கொண்டிருந்தாள். அவள் அணிந்திருந்த புடவையையும், கையில்லாச் சோளியையும், உடம்பில் சுருக்கம் சிறிதுமில்லாமல் அந்த உடையை அவள் அணிந்திருந்த பாங்கையும் கண்டு வியந்தனர், அந்தப் பெண்கள். ஏர் இந்தியா வரவேற்புப் பெண்மணி போல் அவள் உடை அணிந்திருந்தாள்.

நம்மவர்களைப் போல் அந்நாட்டு மக்களும், சந்தனத்தை நுனி விரலால் எடுத்து முகர்ந்து விட்டு இரு கைகளிலும் தேய்த்துக்கொண்டு குங்குமத்தை எடுத்துப் பொட்டிட்டுக் கொண்டனர்.

பனிச் சிலிர்ப்போடு மாலை மங்கும் நேரம். அரங்கத்தின் வராந்தாவில் கம்பீரமாக உடையணிந்து வந்த ஓர் உருவத்தைக் கண்டு அவள் இன்ப அதிர்வில் திகைத்தாள். அந்தத் தேசத்தின் நிறத்தவர்களைக் கண்ட விழிகளுக்கு அவன் நிறம் மங்கலாகத் தெரிந்தாலும், மனத்தில் பளீரெனப் பிரகாசிக்கிறது. கண்களில் ஓர் இனிய ஆவல் துடிப்பு மின்னலிடுகிறது.

அவளைப் பார்த்தகணமே அவன் முகத்திலும் திகைப்பும், துடிப்பும் சிதறியது தெரிந்தது. வியப்புடன் அவன் மெல்ல நடந்து அவளருகே வந்தான். அவனால் ஏற்படுத்தப்பட்ட பிரிய உணர்ச்சிகளை ஞாபகப்படுத்தும் அதே பார்வை. அவனை நோக்கும் சீதாவின் விழிகளில் வெட்கம் படர்ந்த பாவனை பின்னுகிறது. இதழ் நலுங்காமல் ஒரு புன்னகையை உதிர்த்தவள் மரியாதைக்காக அவன் நீட்டிய கரங்களை ஏற்காமல், கைகூப்பி வணக்கம் தெரிவித்தாள்.

"ஓ ! ஐ ஆம் ஸாரி ! இங்கே யெல்லாம் பழகிப் பழகி இந்தப் பழக்கமே ரத்தத்தில் ஊறிப் போயிற்று" என்று அந்தத் தேச மொழியிலேயே கூறினான்.

அவள் மெல்லிய குரலில் அதே மொழியிலேயே வினவினாள். "நீங்கள் இங்கேயா இருக்கிறீர்கள் ? 'ஸ்டேட்'ஸில் இருப்பதாகச் சொன்னீர்களே ?"

"இப்போது ஒரு மாதமாக இங்கேதான் இருக்கிறேன் ஸீதா !" என்று கூறியவாறே அவளை நோட்டமிட்டான் அவன்.

மெல்லிய 'ரவிக்'கின் பிடிப்பில், ஓவியம் போல் புலப்பட்ட அங்க லாவண்ய எடுப்புப் புரியும்படி உடுத்திய புடவையின் அமைப்பில், தலையின் நவீன அலங்காரத்தில், முகத்தின் புதிய பளபளப்பில், பழகும் இனிய நேர்த்தியில் ஒரு தேவதையைச் சந்திக்கும் விகசிப்பு ஏற்பட்டது அவனுக்கு.

"உன்னை இங்கு சந்திக்க நேரும் என்று கனவுகூடக் கண்டதில்லை நான்!"

"நானும்கூட நினைக்கவில்லைதான்!"

"முழு நேர வேலையோ ?"

"வாரத்துக்கு ஒரு தினம் விடுமுறை. தினமும் காலை மாலை 'ட்யூட்டி' உண்டு."

"அப்படியானால் விடுமுறையன்று உன்னை என் விருந்தாளியாக அழைக்கிறேன். வருகிறாயா, என் அப்பார்ட்மெண்டுக்கு?" அவன் குரலின் ஆவலில், அவள் மறுத்து விடக் கூடாதே என்ற அச்சமும் மிதந்தது.

சீதா யோசித்தவாறே, "நீங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"நான் உன்னை அழைத்துப் போக வருகிறேனே.... ஞாயிறு காலை... தயாராக இரு....." அவன் அவளை அள்ளி விழுங்கிவிட்ட மனத்தோடு, தயங்கியவாறே பொருட்காட்சியைக் காண நடந்தான்.

"ஸ்ரீதர்!" என்று சீதாவின் இதழ்கள் ஜபித்தன. அவளது மனத் துடிப்பின் ஒவ்வொரு சத்தமும் அந்தப் பெயரையே தாளமாக்கித் தட்டியது போலிருந்தது. இத்தனை நேசமா அவனிடம்? இத்தனை பிரியமா அவனிடம்? அவளால் நம்ப முடியவில்லைதான்!

"ஸீதா !" அவன் பெயரை எத்தனை சகஜமாக உச்சரித்து விட்டான். அது பழக்கப்பட்டதுபோல் நெஞ்சில் ஒலி பிறந்து விட்டது.

அந்தக் குரலமைப்பின் நெஞ்சக் கிளர்ச்சியில் அவள் மேனி சிலிர்த்தது. தன்னுள் மறைந்திருந்த எதையோ ஏற்றுவிட்ட ஒப்புதலில் சிரிப்பு விரிந்தது.

அவன் அருகே நடக்கும் போதும் அவன் சிரிப்பை ஏந்தும் போதும் கண்களில் சந்திப்பை அணையும் போதும் அவள் பூரித்துத் தான் போனாள்.

லண்டனின் பிரசித்தமான பிக்கடில்லி சர்க்கஸ், பார்லிமெண்ட் கட்டடம், அதையடுத்த பிக்பென் கடிகாரம் எல்லாவற்றையும் சீதாவுக்குக் காட்டினான் ஸ்ரீதர். பக்கிங்ஹாம் அரண்மனையைப் பார்க்காமல் லண்டனின் பயணம் முடிந்து விடுமா என்ன? பழமையான சம்பிரதாயங்களுடன் நடக்கும் ஊர்வலங்களுடன், புதுமையான உடைகள் அணிந்த காவலர்கள். காமிராவும் கையுமாகப் படமெடுப்போர் இங்கே நிறைந்திருந்தனர்.

ஒருநாள் உலகப் பிரசித்தமான 'ஒபரா ஹவுஸ'க்கு அவளை அழைத்துக் கொண்டு போனான் ஸ்ரீதர். பால்கனி முழுதும் நிறைந்து வழிந்த இளம் வயதினரும், முதியோரும், சீமானும் ஏழையும் திரை தூக்கும் போதே ஆவலான பரபரப்பைக் காட்டினார்கள். தடித்த சிவப்பு வெல்வெட் திரைகள், தங்க நிறத்திலும், வெள்ளை நிறத்திலும் வரையப்பட்ட வேலைப்பாடுகளுடன் கண்ணைக் கவர்ந்தன. பிரசித்தமான நடனம் ஒன்று முடிந்த போது இடியோசை போல் கையொலிகள் அதிர்கின்றன.

''சீதா! உனக்குப் பிடித்ததா?'' அவள் தோள்களில் அவன் கைகள் படுகின்றன. உணர்வுபூர்வமான அன்பின் பொருளைக் கண்களில் தேக்கி அவளைப் பார்த்தான் அவன்.




வியன் வெளியில் பறப்பது போல் அவளிடம் ஆனந்தம் விம்மியது. உள்ளத்தில் தெளிந்த பரபரப்பில் கிளர்ச்சி மயக்கம் பரவியிருந்தது.

''ரொம்ப நன்றாக இருந்தது!'' அவளது மிடுக்கான குரலில் குழைவு கலந்து கொண்டு விட்டது.

''உன்னோடு கழிக்கும் இந்த நாட்கள் ரொம்ப சீக்கிரம் ஓடிக்கொண்டிருப்பதுபோல் தெரிகிறது சீதா. நிகழ்ந்து கொண்டிருக்கும் இந்தக் கணங்களின் இனிமை எல்லாம் வேகமான அவசரத்தில் ஒரு முடிவுக்கு வந்து விடும் போல் ஏதோ ஒரு பயம் ஏற்படுகிறது..... இதைத் தவிர்க்க வேண்டும் என்று யோசனை தோன்றுகிறது..... உனக்கு எப்படியோ?'' அவள் மனத்தை ஊடுருவிப் பார்ப்பது போல் வார்த்தைகள் வந்தன.

இனிய போதையுள் புதைந்திருந்தவள் 'சட்'டென்று விழித்துக் கூறினாள். ''எனக்கு, எனக்கும்.... !''

''அப்படியானால் நாளை மாலை சந்திப்பில் நாம் மனம் கலந்து பேசலாம்!''

மரங்களின் நிழலில் அந்தக் குளிர்ச்சி. பூங்காவின் தன்மையில், கனத்த ஆடைகளின் தழுவலில், கூறுமல் கூறிக் கொள்ளும் விழிகளின் மெல்லிய உரையாடலில் அந்த இருவரும் ஈர்ப்பில் நெருக்கம் மிகுந்து வந்தனர்.

கையிலிருந்த மலர்க் கொத்தை அசைத்தவாறே சீதா அவனைப் பார்த்தாள். அவனால் ஏற்படுத்தப்பட்ட பிரிய உணர்ச்சிகளை ஞாபகப்படுத்தும் அதே பார்வை! ஞாபகப் படுத்தியபின் ஏற்படும் ரகசியக் குதூகலம். உள்ளம் நனைந்து பீறிடும் ரகசியக் குறுகுறுப்புக்கள்.

இப்போது மனங்கள் குலவ நின்ற அவர்கள் உலகமே தனி!

படகில் சென்றபோதும், ஹோட்டலில் சம்பாஷித்த போதும், நாடகக் கொட்டகையில் மகிழ்ந்தபோதும் உணர்ந்தறியாத ஒரு மன இணைப்பு. இந்த நிதானமான ஏதுமற்ற தனிமையில் இருவர் உள்ளமும் பூத்துக் கொண்டன.

''இனி என்றுமே அதிகரிக்கும் அன்போடு தான் நான் லண்டனை நினைத்துப் பார்க்க முடியும், சீதா!'' என்று கூறிய ஸ்ரீதரின் முகத்தில் புன்னகை குவிந்தது.

அந்தப் புன்னகை எதிரே இருந்தவளின் அன்பை யாசித்தது. அவள் இதய அந்தரங்கத்துடன் உறவாடத் துடிக்கிறது. அவனது நுண்ணிய உணர்வுகளை அவள் புரிந்துகொள்ளாமல் இல்லை. அவர்கள் இருவருக்குமான அந்தத் தனிமை பல முறை கிடைத்த போது, ஊறும் நினைவுகளின் மணம் நிறைந்து பூத்தது. அன்பின் உறவும், அதிசயச் சூழலுமாய் வாழ்வு புதுப்பிக்கப்பட்ட நேரம் அது. சந்தனத்தில் கலந்த பன்னீராக மணம் கூடி நின்ற வேளை அது. கண்கள் பொங்கி மலரும் சிரிப்பு.

இதழ்கள் மடங்கித் துடிக்கும் சிலிர்ப்பு. அவள் விரும்பியதும் அதுதான். அவனுக்கும்தான் வேண்டியிருந்தது அவளது மகிழ்ச்சி அலைகளின் பிரதிபலிப்பு.

## இணைந்த தூரத்திலே ஒரு தென்றல்!

**வோக்ஸ் வேகன் கார் கம்பெனியில் தினமும் 200 கார்கள் விற்பனைக்கு லாயக்கில்லை என்று ஒதுக்கப்படுகின்றன. — ஜாக் - 'பாலி'**

இடைவெளி குறுகியதை. மூச்சுக் கனல் ஒருவருக்கொருவர் உணர்த்தியது.

" நாம் இனி பிரிந்திருக்க முடியாது. சீதா ! என்ன சொல்கிறாய் நீ ?"

சீதாவின் முகம் குங்கும வெள்ளத்தில் மூழ்கியது. இதழ்கள் படபடக்க அவள் நிமிர்ந்து பார்த்து விட்டுக் குனிந்தாள். அவளது மெல்லிய குரல், "உண்மைதான்! ஆனால்..." என்று தயங்கியது.

"ஆனால் என்ன? நாளை உன் அதிகாரியிடம் நான் பேசுகிறேன். இந்த இந்திய முறைப்படியான விவாகத்தை லண்டன் மக்களும் கண்டு களிக்கட்டும்...! நாளைக் காலை பத்து மணிக்கு என் அப்பார்ட்மெண்டுக்கு வந்துவிடு. அங்கு ஓர் அறிமுக விருந்து நடத்தப் போகிறேன் !"

கரிய வண்ணத்தின் பின்னணியில் வெளிர் வண்ணத் தூரிகையால் இலேசாக நிழல்களாய்ப் போடப்பட்ட சித்திரமாகப் பனிக் குளிப்பில் இயற்கை வண்ண ஜாலம் அதிகாலை நேரத்தை ரம்மியமாக்கிக் கொண்டிருந்தது. உள்ளமும், உணர்வும் புதுமையான குதூகலத்தில் திளைக்க, எழவே மனமில்லாமல் படுத்திருந்த சீதா ஸ்ரீதரின் அபார்ட்மெண்டுக்குப் போக வேண்டும் என்ற நினைவு எழுந்ததும் 'விருட்'டென்று எழுந்து கொண்டாள்.

பனிச்சென்ற உடையில் பழைய பாணி. நெற்றிப் பொட்டிலிருந்து கைவிளையம் வரை கச்சிதமான அலங்காரம். அன்பில் அடிமைப் பட்டுவிட்டு ஆதரவு தேடும் தோரணை.

ஸ்ரீதரின் இருப்பிடத்தில் அவளுக்கு ஓர் அதிசயம் காத்திருந்தது. அவளது மற்ற ஐரோப்பிய நண்பர்களுடன் அவளது அதிகாரியும் உட்கார்ந்திருந்தார்! அவளைப் பார்க்கும் போதே அவர் முகத்தில் எல்லாம் உணர்ந்து கொண்ட புன்னகை வரவேற்கிறது. வணக்கம் கூறிவிட்டு அவள் அமர்ந்து கொண்டாள். இத்தனை நாட்களாக அவளிடம் விடைபெற்றிருந்த நாணம் சரியான சந்தர்ப்பத்தில் அவளைச் சூழ்ந்து கிசுகிசு மூட்ட ஆரம்பித்தது.

ஸ்ரீதர் அவளை மற்றவர்களுக்கு அறிமுகப் படுத்துகிறான்.

"இவள் சீதா ! என் மனைவியாகப் போகிறவள். இந்தச் சமயத்தில் இன்னொரு விஷயமும் சொல்ல வேண்டும். நான் முன்பே மணமானவன்!"

"உங்களுக்கு மணமாகி விட்டதா ஸ்ரீதர்?" ஒருவர் கேள்வி.

"ஆம்! ஆனால் மூன்றே மாதங்களில் நானும், என் மனைவியும் விவாகரத்து செய்து கொண்டோம்!"

"ஏன் அப்படி? இந்தியாவில் விவாக ரத்துக்கள் சகஜமில்லையே?"

"சகஜமில்லைதான். ஆனால் எங்களைப் போன்ற படித்த வாலிபர்களும், யுவதிகளும் காதல் கொண்டால், அதைப் பெற்றோர்கள் ஆதரிப்பதில்லை ! பெற்றோர்கள் செய்யும் 'அரேஞ்ட் மாரேஜ்' எங்களுக்குப் பிடிப்பதில்லை !. அப்படித்தான் முன்பின் தெரியாமல் நானும், 'அவ'ளும் தம்பதியாக்கப்பட்டோம். எப்படி அவளைப் பார்க்காமலேயே நான் அவளை வெறுத்தேனோ, அப்படியே அவளுக்கும் என் மீது பிரியம் விழவில்லை. எனவே, நாங்கள் இருவரும் நிலவிரில் குடும்பம் நடத்த வந்ததும் மன ஒற்றுமையின்றிக் களைத்தோம். பிரியத்தின் கனவுகள் எங்களிடையே வர வரக் குறைய ஆரம்பித்தன. நாங்கள் தோற்றுவிக்க முயன்ற அன்பு, முற்றிப் பழுக்காமல் முறிந்து விழுந்து விட்டது. எனவே நான் விவாகரத்து செய்வதென்று தீர்மானித்தேன். 'மாடர்ன் கேர்ல்' ஆதலால் அவளும் மறுக்கவில்லை. இருவரும் ரத்து ஏற்றுப் பிரிந்தோம். அந்தப் பெண் இந்தச் சீதா தான்!"

"என்ன? அதே சீதாவா?"

"ஆம்! இப்போது மூன்று வருடங்களுக்குப் பின் அவளைப் பார்த்த போது, எங்கள் அறிமுகம் ஒரு புதியவர்கள் சந்திப்பாக மலர்ந்தது. ஒருவருக்கொருவர் அன்பு கொள்ளத் தக்கவர்கள்தான் என்ற தீர்மானமும் உறுதிப்பட்டு விட்டது. எங்கள் உணர்வுகள் இப்போதுதான் மலர்ந்தன. இந்த ஈடுபாடு இனி என்றும் மாறாது. எனவே, நாங்கள் இருவரும் மறுபடியும் மணம் செய்து கொள்வதென்ற முடிவுக்கு வந்தோம் !"

"வாட் ஏ ஒண்டர் ! அந்த உங்கள் மனைவியையே திரும்ப மணக்கப் போகிறீர்கள்! என்ன புதுமை !" என்றார் ஒருவர்.

"புதுமையே இல்லை ! இதுதான் மனத்தத்துவம். உங்கள் இருவருக்குமே இது மறுமணம் ! ஆனால் உங்களின் முதல் துணைதான் மறுபடியும் துணையாகிறது. வாழ்க நீங்கள்! வளர்க உங்கள் அன்பு!" என்று வாழ்த்தினார் ஒரு பேராசிரியர்.

"இதில் ஆச்சரியம் ஒன்றும் பார்த்தீர்களா? திருமணத்தைப் புனிதமாக நினைத்து விவாக ரத்து அபூர்வமாக நடக்கும் பாரதத்தில், ரத்து செய்து கொண்ட இவர்கள், அது மலிந்து கிடக்கும் நம் நாட்டில் மறுபடியும் ஒன்றுகூடி விட்டார்கள் !"

நண்பர்களின் வாழ்த்தொலிகளுக்கு அன்பை மீட்ட உள்ளங்கள் நன்றி கூறின.

கண்காட்சித் தலைவர் அது முடிவடைந்ததும் சீதாவை லண்டனிலேயே தங்கும்படியான முயற்சிக்கு இந்திய ஹைகமிஷன் மூலம் முயற்சி செய்வதாக ஒப்புதல் அளித்தார்.

எத்தனை வேடிக்கையான இணைப்பு! உறங்கிக் கிடந்த அவர்களது உணர்வுகளின் மாறிய பருவத்தில் ஏற்பட்ட அந்த மறுமலர்ச்சி எத்தகு அதிசயமான ஒன்று !. இணைக்கப்பட்டபோது வெறுத்துப் பிரிந்தஜோடி, தானாகவே மனமுவந்து இணையும் பருவ மாற்றம் அது ! காலமறிந்த சந்திப்பின் விசிப்பு அது!

கனவுப் பூக்களாக அவர்கள் கண்கள் அருகருகே சந்தித்து மலர்கின்றன. புதிய வாழ்வின் தொடக்கம் அங்கே ஆரம்பித்துவிட்டது.

கோபப்படாதீங்க ஸிஸ்டர். 'அழகாயிருக்கு'ன்னு நான் சொன்னது இந்த டிரான்-ஸிஸ்டரை! இதன் ஒலிநயம் இன்ப மயம்!

ரூ. 175

# மர்பி மினி பாய்

• அழகான வடிவமும் சிறப்பான ஒலிநயமும் கொண்ட 2-பாண்டு டிரான்ஸிஸ்டர்.

• இந்த செட்டின் சிறப்பம்சம்: ஆம்ப்ளிஃபைடு கெயின் கண்ட்ரோல் — எல்லா நிலையங்களையும் மிகத் தெளிவாகவும் இனிமையுடனும் தருகிறது. பலவீனமான நிலையங்களின் ஒலியை தானாகவே பெருக்கித் தருகிறது.

• பாட்டரி செலவு மிகவும் குறைவானதால் இது சிக்கனமானதுங்கூட. 4 பெரிய சைஸ் செல்களில் இது அமோகமாக இயங்குகிறது.

ரேடியோ உற்பத்தித் துறையில் 21 வருட ஆராய்ச்சி, திறமை மற்றும் தொழில்நுட்ப அறிவை பின்பலமாகக் கொண்ட அதிநவீன, இந்தியாவின் மிகப் பெரிய 'பாக்டரியில் மர்பி டிரான்ஸிஸ்டர்கள் தயாரிக்கப்படுகின்றன.

**மர்பி** இல்லத்தை மகிழ்விக்கிறது!

MAS/437

இந்தக் கணம் சிதைவை
எதிர்த்துப் போரிடுகிறதா
உங்கள் பற்பசை?

# ஸிக்னல் 24 மணி நேரமும் உங்கள் பற்களைப் பாதுகாக்கிறது



**சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழிக்கும் ஹெக்ஸாக்ளோரபீன் இருக்கிறது ஸிக்னலின் செவ்வரிகளிலே.**

பிரஷ்ஷுக்கு எட்டாத இடம் எங்கும் எட்டி, சிதைவுக் கிருமிகளை வேட்டையாடுகிறது ஸிக்னல். அதன் நுரையின் செயல்வேகம்...வாய்மலரும் தூய்மை. அதோடல்ல. துலக்கி நெடுநேரம் ஆனபின்னரும் உங்கள் வாய்நலனைக் காத்துநிற்கும். இவ்வளவு செய்ய இயலுமோ சாமானிய பற்பசைகளால்?



நின் பக்கம் தவறு இருக்கும்
போது விட்டுக் கொடுப்பவன் புத்திசாலி.
நியாயம் இருக்கும்போது விட்டுக் கொடுப்பவன்
கலியாணமானவன். - ஆங்கில முதுமொழி- 'ஜேஜே'.

---

## பொருள் தொலைப்பது தொல்லையல்ல!

லண்டனில் பஸ் டிக்கெட்டுக்குப் பின்புறம் கீழ்க்கண்டவாறு அச்சிட்டிருப்பார்கள்: ''உங்களுடைய பொருள்களில் எதையாவது பஸ்ஸில் தவற விட்டு விட்டீர்களா? அப்படியானால், லண்டன் டிரான்ஸ்போர்ட்டைச் சேர்ந்த ''இழந்த பொருள் அலுவலகத்''தில் விசாரிக்கலாம். பகல் 10 மணி முதல் 6 மணி வரை இந்த அலுவலகம் திறந்திருக்கும். இது, வடமேற்கு லண்டனில் பேக்கர் தெரு, 200ம் இலக்கமுள்ள கட்டிடத்தில் இருக்கிறது. பேக்கர் தெரு மின்சார ரயில் நிலையத்திற்கு மிகச் சமீபம். நீங்கள் நேரில் செல்ல இயலாவிட்டால், கடிதம் எழுதினால் போதுமானது.– 'ஸ்ரீ'



**அழகு**

சமய உணர்ச்சியோடும் காதல் உணர்ச்சியோடும் தேடாமல் இன்ப உணர்ச்சியால் மட்டுமே தேடும் அழகு தேடுபவனை இழிவுபடுத்தி விடும். -எமர்சன்

**செயல்**

செயல் எப்போதும் இன்பம் தராமல் இருக்கலாம். ஆனால் செயல் இல்லாமல் இன்பம் உண்டாவதில்லை. - டிஸ்ரேலி

அனுப்பியவர்: காழி ஜெஸா

**மேதை**  **யார்?**

- □ மாத்திரையைக் கண்டுபிடித்தவன் புத்திசாலி. அதன்மேல் சர்க்கரையைப் பூசியவன் மேதை. - புளுபார்க் கப்ரீதீப்ஸ்
- □ மேதை என்றால் இரண்டு சதவீதம் கற்பனையும் தொண்ணூற்றெட்டுச் சதவீதம் கடும் உழைப்பும் என்று பொருள். - எடிசன்
- □ மேதைத்தன்மை என்பது மறைமுகமான உழைப்பும் விடாமுயற்சியும்தான். - ஆஸ்டின்
- □ மேதைகளின் முதற் கடமை தற்பெருமையைக் கைவிடல். - எபிக்டேடஸ்

தொகுப்பு: அலவன்

## கோழிமுட்டைக்கு இரட்டை ஓடு!

அமெரிக்காவில் முட்டை உடைந்து போவதால் மட்டுமே உற்பத்தியாளர்களுக்கும் வணிகர்களுக்கும் ஆண்டுக்கு ஒன்றே முக்கால் கோடி டாலர் இழப்பு ஏற்படுகிறது. இதனைத் தவிர்ப்பது எப்படி? இடையறாமல் முன்னேறி வரும் விஞ்ஞானத்தின் உதவி நாடப்படுகிறது. வாஷிங்டன் மாநில அரசாங்கப் பல்கலைக் கழகத்திலே உணவு,கோழிப் பண்ணை வல்லுநர்கள் முட்டைக்கு ''இன்னொரு ஓடு'' தருவது குறித்து மிகத் தீவிரமாக முயற்சி செய்து வருகின்றனர். இந்தத் திட்டத்துக்குத் தலைவராக இருப்பவர் டாக்டர் ஜான் ஸ்பென்ஸர். அவர் கூறுவதாவது: ''முட்டை ஓட்டுக்கு வலுவூட்டும் பூச்சு ஒன்றைக் காண முயலுவதே நாங்கள் செய்து வரும் பணி. இத்தகைய பூச்சு, முட்டை உடைந்து போவதைத் தடுக்கக் கூடும்.''

ஆதாரம்: அமெரிக்கன் ரிப்போர்ட்டர் தகவல்: சுதாகரன்

---

''சுலபமாகக் கிடைக்கும் வெற்றியைப் போன்று நீங்கு
செய்யக் கூடிய காரியம் வேறு ஏதுமில்லை.''
-ஜான் ஸ்டீபன்பெக் - (மென் ஒளி)

அம்பப்பேட்டை ரயில் நிலையத்தை அலட்சியப்படுத்திக் கொண்டு, மணிக்கு அறுபது கிலோமீட்டர் வேகத்துக்கு மேல் ஜிருஜிருவென்று போக வேண்டிய அந்த எக்ஸ்பிரஸ் வண்டி, கைகாட்டிகள் இரண்டும் பளீரென்று பச்சையைக் காட்டிக் கொண்டிருந்தும், அன்றைய தினம் அதிசயமாய் அங்கே நின்றது. டிரைவரும் பயர்மெனும் பிளாட்பாரத்தில் இறங்கி, ஸ்டேஷன்மாஸ்டரின் அறையை நோக்கி நடக்கத் தொடங்கினார்கள். அதற்குள், கார்டும் இறங்கி வந்து விட்டார். அலுவலில் இருந்த உதவி எஸ். எம். ரங்கராஜன் அவர்களைப் பார்த்ததும், "எனக்குத் தெரியும்!.... இஞ்சினிலிருந்து நாலாவது பெட்டியை அவிழ்க்க வேண்டும்! சக்கரத்தின் ஆக்ஸிலில் மிகவும் சூடாகித் தகதகத்துக் கொண்டிருக்கிறது! அங்கிருந்து நிப்பொறிகள் பறக்கின்றன... இல்லையா?" என்று கேட்டார்.

டிரைவருக்கு வியப்பாக இருந்தது. தலைப்பாகையைப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டு, "யெஸ், மாஸ்டர்!" என்றார்.

"வண்டி ஓடும்போதே பார்த்துவிட்டேன். அதனால் தான் அவ்வளவு கரெக்டாகச் சொன்னேன்!" என்ற ரங்கராஜன், உடனே 'கண்ட்ரோ'லுக்குச் செய்தியைத் தெரிவித்து விட்டு, பாயிண்ட்ஸ்மன் பச்சை முத்துவை அழைத்தார்.

"பச்சை! இஞ்சினிலேயிருந்து நாலாவது பெட்டியை அவிழ்த்து, சைட்—ஷெட் லயனில் வைக்கணும். முதல்லே, பாசஞ்சர்களிடத்திலே விஷயத்தைச் சொல்லி எல்லாரையும் இறங்கச் சொல்லு.... இதோ, நானும் வருகிறேன்....."




இஞ்சினிலிருந்து நான்காவதாக இருந்தது. ஒரு முதல் வகுப்புப் பெட்டி. இரவு மணி மூன்றரையானதால், எல்லாப் பிரயாணிகளும் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தனர். பெட்டிக்குள் ஏறி, ஒவ்வொரு கம்பார்ட்மெண்டின் கதவையும் தட்டி, கதவைத் திறந்தவர்களிடம் விஷயத்தை விளக்கினான், ரங்கராஜன். நல்ல காலமாக, பாதி அறைகள் காலியாகவே இருந்தன.

பிரயாணிகள் எல்லாரும் பெட்டி படுக்கைகளுடன் இறங்கியதும் அவர்களுக்கு வேறு இடம் பிடித்துக் கொடுக்க வேண்டியிருந்தது. அந்தப் பொறுப்பை கார்டிடம் ஒப்புவித்து விட்டு, பிரயாணப் பெட்டியை அவிழ்த்து வேறு லயனில் வைக்கும் பணியில் ஈடுபட்டார் ரங்கராஜன்.

அரை மணி தாமதத்துக்குப் பின் வண்டி புறப்பட்டுச் சென்றது.

காலே ஆறு மணிக்கு டியூட்டி முடியும் தருவாயில் பச்சை முத்துவை அழைத்தார். பதில் வரவில்லை. 'எங்கே தூங்கிக் கொண்டிருக்கிறானோ?' விடுவிடென்று யார்டில் இறங்கி, எக்ஸ்பிரஸில் அவிழ்த்த முதல் வகுப்புப்பெட்டியை நோக்கி அவரே போனார். ஒவ்வோர் அறையாகச் சாத்திக் கொண்டே வருகையில், அதோ, 'பர்த்'துக்கு அடியில், என்ன? ரங்கராஜன் அருகே சென்று குனிந்து எடுத்தார். பள்ளி மாணவர்கள் புத்தகங்களை எடுத்துச் செல்லும் சிறிய அலுமினியப் பெட்டி அது. எல்லாக் கதவுகளையும் மூடி விட்டுப் பெட்டியும் கையுமாக அலுவல் அறைக்கு வந்தார் அவர்.

புத்தகப் பெட்டியைத் திறந்ததும், அவர் கண்கள் வியப்பால் விரிந்தன. புத்தகங்களுக்கு மேலாக ஓர் அழகிய பாலகனின் புகைப்படம். ஒரே சிரிப்பு — இதயத்திலிருந்து எழும் சிரிப்பு. குறு குறு கண்கள். அடர்த்தியாய்ச் சுருள் கேசம். கண்டவரை பார்ப்பவரை மயக்கும் அமானுஷ்யக் கவர்ச்சி.... இந்து வயதுப் பையனிடம்தான் என்ன வசீகரம்!....

எக்ஸ்பிரஸில் பெற்றோர்களுடன் பிரயாணம் செய்திருப்பான். பிரயாணிகளை வேறு இடங்களுக்கு மாற்றும் பணியை ரங்கராஜன் ஏற்றுக் கொண்டிருந்தால், அந்த அழகிய இளம் முகத்தை அவர் பார்த்திருக்கக் கூடும். அவனுக்கு வேறு இடம் பிடித்துக் கொடுக்கும் சாக்கில், அவனைத் தம் தோளில் தூக்கிக் கொண்டிருந்திருப்பார். அப்படியே, இதய தாகம் தீரும்படி முத்தமாய்ப் பொழிந்திருப்பார்.....

இப்போது, இதோ அஞ்சல் அட்டை அளவில், அவர் கையிலேயே நிற்கிறான்,

பையன்! மார்பு வரை எடுத்த புகைப்படம். ரங்கராஜன் புகைப்படத்தைத் திருப்பினார். பின்புறத்தில், 'சேகர்' என்ற பெயருக்குக் கீழே தேதியும் எழுதி யிருந்தது. புகைப் படம் எடுத்து இரண்டு தினங்களே ஆகி யிருந்தன.

ரங்கராஜன் புகைப்படத்தைத் தம் உதட்டருகே கொண்டு வந்து, முத்தம் கொடுத்துத் தம் வேட்கையைச் சற்றே தணித்துக் கொண்டார்.

... வசந்தா இதைப் பார்த்தால் எவ்வளவு சந்தோஷப்படுவாள்? ஐயோ, குழந்தை களிடம்தான் அவளுக்கு எத்தனை பிரியம்! குழந்தைகளை, அதுவும் கண்ணுக்கு லட்சண மாக விளங்கும் குழந்தைகளைக் கண்டால், விடவே மாட்டாள்.... ஆனால், தெய்வம் அவளைச் சோதிக்கிறது. பிறந்த மூன்றும்



அவளை மோசம் செய்து விட்டன. தன் அக்காளின் பிள்ளையை அழைத்துத் தன் னிடம் வைத்துக் கொண்டாள். ஒரு வாரத் துக்குள் பையனுக்குக் கடுமையான காய்ச்சல் வந்து விட்டது. பையனின் பெற்றோர்களைத் தந்தி கொடுத்து வரவழைக்கும்படி ஆகி விட்டது. தஞ்சாவூர் பெரிய ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்து, குணமாகியதும் அங்கிருந்தபடியே தங்களுடன் அழைத்துக் கொண்டு போய் விட்டார்கள்!... இவர் களுக்குக் குழந்தை ராசியே இல்லையாம்!... போகட்டுமே... கண்ணில் படுகிற குழந்தை களையெல்லாம் தன் குழந்தையாகக் கொள் கிறாள் வசந்தா. இந்தப் புகைப்படப் பாலகனை மட்டும் நேரில் அவள் பார்த்துவிட்டால்...?

புகைப் படத்துக்குக் கீழே இருந்த புத்த கங்களையும் நோட்டுக்களையும் புரட்டினார் ரங்கராஜன். அந்தப் பையனைப் பற்றிய பல செய்திகள் தெரிய வந்தன.

வில்லா மேரியா கான்வென்டில் முதல் வகுப்புப் படிக்கிறான், சேகர். பாடமொழி ஆங்கிலம். அவனுடைய தந்தையின் பெயர் வெங்கடராமன், திருச்சி, தில்லைநகரில் வீடு...

பளிரென்று ஓர் எண்ணம்.

இரண்டு நாட்கள் சென்று ரங்கராஜனுக்கு வாராந்திர ஓய்வு நாள் வருகிறது. அன்றைய தினம் திருச்சிக்குப் போய், வெங்கடராம னிடம் பெட்டியைச்-சமர்ப்பித்து, அப்படியே சேகரையும் பார்த்து ஒரு முத்தம் கொடுத்து விட்டு வந்தால்?.....

வசந்தாவும் வருவதாகச் சொல்வாள். வரட்டுமே? அவளும்தான் இந்த அழகுச் செல்வத்தைக் கண்டு சொக்கட்டுமே!...

சட்டப்படி பிரயா ணப் பெட்டியில் கிடைத்த அந்த அநு மினியப் பெட்டியை, ரயில் நிலையத்திலேயே பதிவு செய்து வைத் திருக்க வேண்டும். ரங்கராஜன் அன்று அப்படிச் செய்ய வில்லை. இரண்டு நாட்கள் கழித்துப் பெட்டிக்கு உரியவரி டம் அவரே நேரில் சென்று சேர்ப்பிக்கப் போகிறாரே?

குழந்தையின் பேரழ கில் தன்னையே மறந் தாள் வசந்தா. புகைப் படத்தை மேஜை மேல் நிற்க வைத்தாள். திடீ ரென்று சேகர் ஸ்தூல உருப் பெற்று, தன் குஞ்சுக் கால்களால் மேஜை மேலிருந்து இறங்கி அந்த அறை யில் தத்தித் தத்தி நடந்தான். வசந்தா அவனைப் பிடிக்கப் போனாள். அவன் கலீ ரென்று நகைத்தபடியே அவள் பிடிக்கு அகப் படாமல் ஓடிப்போனான். குழம்புக்காக அவள் மாவு அரைத்துக் கொண்டிருக்கும் போது, அவன் சத்தப்படாமல் வந்து, அவள் கழுத் தைக் கட்டிக் கொண்டான். 'அடப் போக்கிரி வேலை செய்ய விடுடா...' என்று அவள் திரும் பிப் பார்க்கையில்... வெறுமை, வெறுமை.

வசந்தாவின் கண்களில் நீர் முட்டுகிறது. நீர்முத்துக்களை, புகைப்படத்தின் மேல் அர்ப்பணிக்கிறாள்...

"நாளைக் காலை ஏழு மணிக்கு ரயில்—திருச்சிக்கு" என்றார், ரங்கராஜன்.

"காலையிலேயே புறப்பட வேண்டுமா?"

"தில்லைநகருக்குப் போய்விட்டு, அப் படியே மலைக்கோட்டை, திருவானைக் கோவில், ஸ்ரீரங்கம் எல்லாம் பார்த்து விட்டு, ராத்திரி திரும்பி விடலாம் என்று பார்க்கிறேன்..."

''சரி...''

அரைமணி வெளியே சுற்றிவிட்டு குவார்ட்டர்ஸுக்குத் திரும்பினார், ரங்கராஜன். சமையல் அறையில் நெய் மணம் வீசியது.

''என்ன பண்ணுகிறே, வசந்தா?''

பதில் சொல்லுவதற்கு அவளுக்கு நாணமாக இருந்தது. அவள் அப்போது மைசூர் பாகு செய்வதன் காரணத்தை எப்படி அவரிடம் விளக்குவாள்? 'குழந்தையை வெறுங் கையுடனு பார்ப்பது?' என்ற உண்மையான விளக்கத்தில் வலு இருப்பதாகத் தோன்றவில்லை; அறிவுபூர்வமான பதிலாகவும் இருக்காது, அது.

''...சும்மா ஏதோ தோன்றியது!...''

ரங்கராஜனுக்குப் புரிந்து விட்டது.

*　　　*　　　*

ரங்கராஜனின் கையில் அலுமினியப் புத்தகப் பெட்டி கனத்தது; வசந்தாவின் கையில் காக்கிப் பையில் எவர்சில்வர் சம்புடத்தில் மைசூர்பாகு கனத்தது!

''மிஸ்டர் வெங்கடராமன்...?''

''நான்தான்!''

''நான் அய்யம்பேட்டையில் ஏ. எஸ். எம். மூன்று நாட்களுக்கு முன் எக்ஸ்பிரஸில் இந்தப் பெட்டி...''

அவரிடமிருந்து பெட்டியைப் பிடுங்கிக் கொள்கிற மாதிரி பெற்றுக் கொண்டார் வெங்கடராமன். கைகள் நடுங்க, பெட்டியைத் திறந்தார். புகைப் படம்!

''இதுதான் ஸார், அவனுடைய கடைசிப் புகைப்படம். ஒரு வாரத்துக்கு முன் மெரீனு பீச்சில் எடுத்தது. புகைப்படம் எடுத்தவுடனேயே பிரிண்ட் போட்டுக் கொடுத்தான்.''

ரங்கராஜனுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. ''என்ன ஸார் ஆயிற்று?''

''...குழந்தை எங்களை மோசம் பண்ணி விட்டான், ஸார்....''

வசந்தா தளர்நடையாய் வாசற்புறத்துக்குத் திரும்பி விட்டாள்.

''ரயிலிலிருந்து இறங்கி வீட்டுக்கு வந்தோம். ஆறு மணி இருக்கும். மார்பை வலிக்கிறது என்றான்.... அப்புறம்... பேசவே....யில்லை....''

வெங்கடராமன் மேல் துண்டினுல் வாயைப் பொத்திக் கொண்டு விம்மினார்.

காலை ஆறு மணி... ரங்கராஜன் அந்தப் புகைப்படத்தைக் கையில் வைத்துக் கொண்டு மனத்தைப் பறி கொடுத்த நேரம்... ரங்கராஜனின் செவியருகில் கோரமான கெக்கலி தொடர்ந்து கேட்டது. 'ஏமாத்திப்பிட்டேனே!... ஏமாத்திப்பிட்டேனே!...'

''இந்தப் பெட்டியைப் பற்றிய நினைப்பே நேற்றைக்குத்தான் எழுந்தது. கடைசியாக எடுத்த அவனுடைய புகைப்படத்தை இதில்தான் வைத்துக் கொண்டான். பெட்டியைக் காணவில்லை என்றதும் தனக்கு ஞாபகச் சின்னமே இல்லாமல் எடுத்துக் கொண்டு போய்விட்டானே என்று என் மனைவி துடித்துப் போய்விட்டாள்... ஸார், இந்தப் புகைப் படத்தைப் பார்த்தால் அவளுக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருக்கும்...'' என்றபடியே உட்புறம் போனார் வெங்கடராமன்.

சில விநாடிகள் அங்கே நின்றார், ரங்கராஜன். அந்த அறையில்தான் சேகர் விளையாடியிருப்பான்; அந்தச் சிறிய நாற்காலியில் அமர்ந்து 'ஸி–ஏ–டி' படித்திருப்பான்; மேஜையில் ஏறிப் புத்தக வரிசையைக் கலைத்திருப்பான்....

அவர் திரும்பி வசந்தாவை நோக்கி நடந்தபோது கையில் கனமில்லை. ஆனால் அவர் நெஞ்சுக்குள் யார் இமயத்தைக் கொண்டு வந்து வைத்தார்கள்?

---

ஸர் ஆபிரே ஸ்மித் எம். ஸி. ஸி.யில் ஆடிக் கொண்டிருந்தார். ஆட்டத்தில் பல தவறுகளை இழைத்துக் கொண்டிருந்தார். உடனே அவர் ஆட்டத்தை நிறுத்தி விட்டுத் தம் பட்லரை விளித்தார். பட்லர் ராஜ நடை போட்டுக் கொண்டு மைதானத்துக்குள் நுழைந்து ஸ்மித்துக்குத் தலை வணங்கினான்.

''என்னுடைய மூக்குக் கண்ணாடியை எடுத்துவா!'' என்று கட்டளையிட்டார். ஒரு தட்டில் மூக்குக் கண்ணாடியை வைத்து எடுத்து வந்து அவர் முன் பவ்யமாக நீட்டினான் பட்லர்.

ஸர் ஆபிரே ஸ்மித் மூக்குக் கண்ணாடியை அணிந்து கொண்டு ஆடத் தொடங்கினார். பௌலர் உடனே தம் முதல் பந்து வீச்சில் அவுட்டாக்கி விட்டார் !

ஸர் ஆபிரே ஸ்மித்துக்கு ஒரே கோபம் !

''மூட்டாள் பட்லர்! அவன் வாசிக்கிற மூக்குக் கண்ணாடியைக் கொண்டு வந்து கொடுத்து விட்டான்!'' என்று உரக்கக் கத்தினார். 'நொண்டிக் குதிரைக்குச் சறுக்கினது சாக்கு!' என்ற கதையில் ஆட்டக்காரர்கள் 'அப்படியா!' என்று வியந்தார்கள் !　　　– குண்டுமணி




சறுக்கினது சாக்கு!

## உடம்பு வலியிலிருந்து விரைவில் குணமடைந்தேன்!

# அமிர்தாஞ்சனம்

## மிக உதவியது

அமிர்தாஞ்சனம் உடம்புவலி, ஜலதோஷம், தலைவலி, சுளுக்கு இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள். 75 வருடங்களாக குடும்பங்களில் பயன்பட்டுவரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம். எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். அது சிக்கனமான ஜாடிகளிலும், கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கிறது.




10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி

அமிர்தாஞ்சன் லிமிடெட் சென்னை - பம்பாய் - கல்கத்தா - புதுடில்லி - ஹைதராபாத் - பெங்களூர்

AM-5483

# விவசாயத்தில் இன்று



## உழுதவன் கணக்குப் பார்த்தால்?

சென்ற வருடம் எனது ஓர் ஏக்கர் நிலத்தில் கரும்பு போட்டேன். லாபத்தை எதிர் பார்த்து. என் துரதிருஷ்டம் ஓர் அடி வரை கருகரு என்று வளர்ந்த கரும்பு அப்படியே நின்றுவிட்டது. விசாரித்ததில் 'சல்பேட்' போடச் சொன்னார்கள். கையில் காசு? என் மனைவியிடம் இருந்த பொட்டுப் பொடிச் சாமான்களை அடகு வைத்து உரம் போட்டேன். யார் புண்ணியமோ அது நன்றாக



வளர்ந்தது. நல்ல அறுவடைச் சமயம்! கரும்பு விலை வீழ்ந்தது. கிடைத்த ரூபாயை வட்டிக் கடைக்காரன் இட்டுக் கொடுத்து என் பொருள்களை மீட்டு, என் கை யிருப்பைப் பார்த்தேன். ரூபாய் 93 இருந்தது. கைவண்டி இழுத்திருந்தால் கூட நிறையச் சம்பாதிச்சிருப்பேன்! உழுதவன் கணக்குப் பார்த்தால்...?

காரைக்குடி — க. சௌந்திர பாண்டியன்

## விஷமப் பிரசாரம் வேண்டாம்

ஒரு கட்டிடம் கட்டி முடிக்கப் பல பேர்கள் கூடி வேலை செய்வது போலவே விவசாயத்திலும் அநேகர் வேலை செய்கின்றனர். ஒரு தனி நபரோ ஒரு குடும்பமோ மட்டும் உழைத்து விவசாயம் முடிவதில்லை. அப்படியிருக்க ''உழுபவனுக்கே நிலம், தொழிலாளி கஷ்டப்படுகிறான்'' என்றெல்லாம் பிரசாரம் செய்யப்படுவது விஷமத்தனமானது. அது தொழிலாளரின் விசுவாசத்தை அழிக்கும். எல்லாவற்றையும் நிர்வகித்து லாப நஷ்டத்துக்குப் பொறுப்பாளியான ஒரே நபர் நிலச் சொந்தக்காரனே.

விவசாயக் கூலியும், மற்ற ஊதியங்களைப் போல் உயர்ந்து கொண்டே வந்திருக்கிறது. இருந்தும் தொழிலாளிகளுக்கும் நிலச்சுவான்களுக்குமிடையே ஒற்றுமை உணர்வைக் குறைக்கக் கம்யூனிஸ்டுகள் செய்யும் சட்ட விரோதக் கிளர்ச்சிகளும் நடவடிக்கைகளும் கட்டின்றி அனுமதிக்கப்பட்டு வருகின்றன.

விவசாயத்தில் வேலை நேரம், அளவு, திறன் முதலியவையும் கூலியைப் போல் நிர்ணயிக்கப்பட வேண்டியது மிக அவசியம்.

நில உரிமை, அநுபோகம், ஒப்பந்தம் இவைகளைப் பாதிக்கும் சட்டங்கள் கண்மூடித்தனமாக இயற்றப்படுவதால் விவசாயத்தை நம்பி வாழ்வோர் பாதுகாப்பும் ஸ்திரத்தன்மையும் இந்தத் தொழிலில் இல்லை என்று கருதி மனம் சோர்வடைகின்றனர்.

இன்றைய விவசாயத்தில் வருமானத்தில் நிகர லாபம் மிகக் குறைவாக இருக்கிறது.



விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் குடும்பம் நடத்துவதே கஷ்டமாகி வருகிறது. வர வர ஏழைகளாகிச் சாகுபடியைக் காலத்தில் அவர்கள் செய்யக் கையில் ரொக்கமின்றித் தவிக்கின்றனர்.

**விருத்திக்கு வழிகள் :**

விவசாயத் தேவைக்கு ஒரு போக நிலத்துக்கு ஏக்கருக்கு நூறு ரூபாயும், இரு போக நிலத்துக்கு ஏக்கருக்கு நூற்றைம்பது ரூபாயும் எட்டு மாதங்களுக்குள் திருப்பிக் கொடுக்கும் ரொக்கக் கடன்களை விவசாயிக்குப் பாங்குகள் வழங்கினால் நல்ல அபிவிருத்தி உண்டாகும்.

சர்க்கார் ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனிலும் கணிசமான பரப்புள்ள மாதிரிப் பண்ணைகள் அமைத்து, செலவு, வருமானம், வரி, நிகர லாபம் கணக்கெடுத்து அதற்கேற்பக் கூலியையும் கொள்முதல் விலையையும் ஒழுங்குபடுத்த வேண்டும்.

நில வளம், நீர்வளம், வேலை வாய்ப்புகள் ஆகியவை இடத்துக்கு இடம் வெகுவாக மாறுபடுகின்றன. உதாரணமாகத் திருச்சி, லால்குடி தாலுக்காவும், தஞ்சை, கும்பகோணம் திருத்துறைப்பூண்டி தாலுக்காக்களும் கடலோரப் பிரதேசங்களும் ஒன்றுக்கொன்று எல்லா வகையிலும் மாறுபட்ட அமைப்பு வாய்ந்தவை. ஆதலால் பிராந்தியவாரியாய் நிலச்சுவான்கள், தொழிலாளிகள், அரசு கொண்ட பிரதிநிதித்துவக் குழுக்கள் ஏற்பட்டு பரஸ்பர ஒத்துழைப்புக்கு வழிவகுத்து எதிர்ப்படும் பிரச்சினைகளுக்குச் சட்டபூர்வமான முடிவுகள் காண வேண்டும்.

எல்லாவற்றையும் விட முக்கியமாக இன்றைய இளைஞர்களுக்கு விவசாயம் கவர்ச்சியுள்ளதாக்கப்பட வேண்டும். அதற்கு ஒரே வழி, அரையாண்டு கோடை விடுமுறைகளைச் சாகுபடி, அறுவடை விடுமுறை என்று மாற்றி அமைத்து, அந்த நாட்களில் படிப்பின் பகுதியாய் ஒவ்வோர் இளைஞனையும் பண்ணை வேலைகளில் ஈடுபடச் செய்ய வேண்டும். அதற்குத் தக்க ஊக்கம், ஊதியம், சூழ்நிலைகளை ஏற்படுத்த வேண்டும்.

தலைஞாயிறு — டி. ஆர். குப்புசாமி

# வாத்தியார்!

அய்க்கண்



**மா**லை நேரம். பஸ் ஸ்டாண்டு வழியாக, கவலையோடு நடந்து கொண்டிருக்கிறேன். என்ன கவலை என்று கேட்கிறீர்களா? கவலை என்றும் ஒன்று இரண்டா, எதைச் சொல்ல? நான் ஒரு நடுத்தரக் குடும்பஸ்தன் என்று சொன்னால் போதுமே, நீங்களே புரிந்து கொண்டு விடுவீர்கள், என்னென்ன கவலைகள் இருக்கு-

மென்று. என் மகன் மதுரையில் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறான். அவன் ஹாஸ்டலுக்குக் கட்டவும் புத்தகம் வாங்கவும் நூறு ரூபாய் அனுப்புங்கள் என்று நேற்று எக்ஸ்பிரஸ் கடிதாக எழுதியிருக்கிறான். பணம் அனுப்புவதற்குத்தான் இரண்டு நாட்களாய் முயற்சி பண்ணிக் கொண்டிருக்கிறேன் — அதாவது இரண்டு நாட்களாய் என் நண்பர்களிடம் கடன் கேட்டுக் கையிலே அறுபது ரூபாய் இருக்கிறது: இன்னும் நாற்பது ரூபாய்தான் வேண்டும்.

சரக் —

காலில் ஏதோ இடறுகிறது. சட்டென்று கீழே குனிகிறேன். இருட்டியும் இருட்டாமலும் இருக்கிற அந்த நேரத்தில், காலடியில் ஏதோ மின்னுகிறது.

ஆ!.... தங்கச் சங்கிலி?....

ஓ! அது தங்கச் சங்கிலியேதான்!

யார் கழுத்திலிருந்தோ அறுந்து கீழே விழுந்து கிடக்கிறது: மூன்று பவுனுக்குக் குறையாது.

சட்டென்று எடுக்கலாமா?...யாராவது பார்த்து விட்டால்? —

மூளை, 'ஸூபர்ஸானிக்' வேகத்தில் சிந்திக்கிறது.

கீழே சங்கிலி... வலிய வந்த சீதேவி....'எடு எடு' என்று பளபளக்கிறதே!.... எடுத்து போலீஸ் ஸ்டேஷனில் கொடுத்து விடலாமா? கொடுத்து விட்டால் நாலைந்து பாராட்டுக்கள். அவ்வளவுதான். நாற்பது ரூபாய்? இதை விற்றால், மூன்று பவுனுக்கு 360 ரூபாய் கிடைக்கலாம். அடேயப்பா! தாராளம்! விற்கும்போது பிடிபட்டு விட்டால்... திருடன்...பிக் பாக்கெட்...ஆளுக்கு ஓர் அடி... 'டேய், திருட்டுப் பயலே! இனிமே திருடுவியாடா? அயோக்கிய ராஸ்கல்! — என் பேச்சின் டேப் ரிக்கார்டர்.....

சுற்றுமுற்றும் பார்க்கிறேன்....

வலது கால், கீழே கிடக்கிற சங்கிலியை மறைத்து அமுக்கிக் கொள்கிறது. எதையோ கீழே போட்டு விட்டதைப் போல் (எதையோ என்ன? என் கௌரவத்தைத்தான்) என்னைச் சுற்றித் தேடுவது போல்

நடிக்கிறேன். கீழே தேடுவது போல்.. குனிந்தவாறே நாலாபுறமும் பார்க்கிறேன்.

கடைத்தெருவில் அதிகக் கூட்டம் இல்லை.

கிழக்கே காந்தி சிலை அருகில் ஒட்டப்பட்டிருக்கும் ஒரு 'சென்ஸார்' செய்யாத ஆங்கிலப் படச் சுவரொட்டியைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் சிலர். என்னை யாரும் பார்க்கவில்லை.

வடக்கே மூன்று 'டைட்ஸ்'கள், ஜவுளிக் கடைக்குள் நின்று கொண்டிருக்கும் இரண்டு 'மினி ஸ்கர்ட்'டுகளின் கால் அழகை ரசித்துக் கொண்டிருக்கிறார்கள். என்னை யாரும் பார்க்கவில்லை.

மேற்கே லாட்டரிச் சீட்டு விற்கும் கடை முன்னே இரண்டு மூன்று பேர் கூடி நின்று, எல்லா ராஜ்யங்களையும் பற்றிப் பேசிக் கொண்டு, பாரத ஒருமைப்பாட்டை நிரூபித்துக் கொண்டிருக்கிறார்கள். என்னை யாரும் பார்க்கவில்லை.

தெற்கே — ஒரு சிறிய தேநீர்க் கடையில் இரண்டு 'கைலி, முண்டாப் பனியன்'கள் தேநீரை உறிஞ்சிக் குடித்தவாறு ரேடியோவில் பாட்டுக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். என்னை யாரும் பார்க்கவில்லை.

எடுப்பதா, விட்டு விடுவதா ?

நாசமாய்ப்போன கடவுளே! எத்தனை தர்ம சங்கடத்துக்கு என்னை ஆளாக்கி விட்டாய் ?

பாதையிலே கிடந்தால் அது நமக்கு உரிமையாகுமா ? போலீஸ் ஸ்டேஷனில் கொடுக்க வேண்டாமா ?

போலீஸ் ஸ்டேஷனில் கொடுத்தால் நாற்பது ரூபாய் கொடுப்பார்களா?

— இவ்வளவும் சொல்வதற்குத்தான் இத்தனை நேரம்: நினைத்தது பத்து இருபது விநாடிகளுக்குள்தான். இந்தமாதிரி இக்கட்டான சந்தர்ப்பங்களில் மனம் எவ்வளவு வேகமாகச் சிந்திக்கும் என்பது உங்களுக்குத்தான் தெரியுமே! ஐ யாம் ஸாரி... உங்களுக்குத் தெரியும் என்றால், நீங்களும் இதே மாதிரி வழியில் கிடக்கிற பொருளை எடுத்துக் கொள்கிற திருடர்கள் என்று அர்த்தமில்லை. மனம் எத்தனை வேகமாகச் சிந்திக்கக் கூடியது என்ற உண்மை உங்களுக்குத் தெரியும் என்றுதான் சொல்கிறேன்.

கடைசியில் —

'பாரடைஸ் லாஸ்ட்' கதைதான்: சைத்தானுக்கே வெற்றி !

மறுபடியும் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே, கீழே குனிந்து, ஏதோ என்னுடைய சங்கிலி கீழே விழுந்ததை எடுப்பது போல், சகஜமாக எடுத்து, 'பாண்ட்' பைக்குள் சட்டென்று போட்டுக் கொண்டு நடக்கிறேன். கண்கள் தாமாகவே சுற்றுமுற்றும் பார்க்கின்றன. என்னை ஒருவரும் கவனிக்கவில்லை.

அடேயப்பா ! இதென்ன, மூன்று பவுன் சங்கிலி, இப்படி சிமெண்ட் மூட்டை மாதிரி கனக்கிறதே !

உடலெங்கும் குப்பென்று வியர்த்துக் கொட்டி, நான் மறுபடியும் குளிக்கிறேன்.

கால்கள் படபடக்கின்றன... சங்கிலியை எடுத்துப் பைக்குள் போட்ட வலது கை தடதட என்று நடுங்குகிறது.

டிக்... டிக்...

இதென்ன பெரிய கோயில் மணிச் சத்தம் கையில்? கைக் கடிகாரத்தின் ... டிக்டிக்தான் இப்படிப் பயங்கரமாகக் கேட்கிறது. கைக் கடிகாரம்கூட இவ்வளவு சத்தம் போடுமா?

படபடப்போடு ஓடத் துடிக்கும் கால்களை அடக்கி, நிதானமாக நடக்கிறேன்.

பின்னால் திரும்பிப் பார்க்கிறேன். தூரத்தில், தேநீர்க் கடையில் நின்று கொண்டிருந்த இரண்டு 'கைலி, முண்டாப் பனியன்'களும் எழுந்து நடந்து வருகின்றனர். அவர்கள் எங்கோ, அவர்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு வருகிறார்கள். எனக்கென்ன ?

வேறு யாரும் பின்னால் காணோம்.

இன்னும் வேகமாக நிதானமாக நடக்கிறேன்.

பின்னால் திரும்பிப் பார்க்கிறேன். அவர்களும் பின்னாலேயே வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எங்கேயோ....

இன்னும் வேகமாக — நிதானமாக —

'' ஸார் !''

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கிறேன். என்னைத்தான் கூப்பிடுகிறார்கள், கைலியும் முண்டாப் பனியனும்.

ஊருக்குப் புதியவர்களோ? எங்கேனும் வழிகிழி கேட்கப் போகிறார்கள் போலிருக்கிறது ! . நான் சங்கிலியை எடுத்ததைப் பார்த்திருப்பார்களோ?.... ஊஹூம்.... பார்த்திருந்தால் அங்கேயே கேட்காமல் இருந்திருப்பார்களா ?

அவர்கள் என் எதிரே வந்து நிற்கிறார்கள். இப்பொழுது கடைத் தெருவின் கோடியில் நின்று கொண்டிருக்கிறோம். பக்கத்தில் யாருமே இல்லை. தூக்கிக் கட்டிய கைலியும், அவர்களுக்குப் பிடித்தமான நடிகர் படம் போட்ட முண்டாப் பனியனும், இடுப்பிலே கையகலமுள்ள தோல் 'பெல்ட்'டும், கையிலே புகைந்து நாறிக் கொண்டிருக்கும் பீடியும....

''என்ன ஸாரு, நம்பளை மறந்திட்டுப் போறே ? நம்ம பங்கை வச்சிட்டுப் போ.''

நான் திகைக்கிறேன்: ''என்னப்பா, என்ன உளர்றே? பங்காவது?''

மற்றவன் பெரிதாகச் சிரிக்கிறான். இயல்பான சிரிப்பில்லை. சினிமாப் பாணிச் சிரிப்பு. ''பார்த்தியா வாத்தியாரே! நம்மகிட்டேயே டபாய்க்கிறாரே ஸாரு!''

வாத்தியாரா? யாருக்கு இவன் வாத்தியார் ? பீடியிலே 'தம்' பிடித்து, சுருள் சுருளாகப் புகை விடுவதைக் கற்றுக் கொடுக்க ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பித்தால், இவனை வாத்தியாராகப் போடலாம் !

''ஏன் ஸாரு, வீதியிலே கிடந்த சங்கிலியை எடுத்து, டபக்குனு பைக்குள்ளே அமுக்கிக்கிட்டியே, அது எங்களுக்குத் தெரியாதுன்னு நெனைச்சுக்கிட்டியா? எங்களுக்குத் தெரியாம இந்த டவுனிலே ஒரு ஈ காக்கை திருட முடியாது, தெரியுமா ?''

எனக்குத் தெரிந்து விட்டது: சரி, இதை போலீஸ் ஸ்டேஷனிலே கொடுத்து, 'நாணயஸ்தன், ஜெண்டில்மேன்' பட்டத்தை வாங்கிக் கொள்ள வேண்டியதுதான்: வேறு வழியில்லை.

பாதி வருத்தத்தோடும் பாதி நிம்மதியோடும் மெதுவாக 'பாண்ட்'டுக்குள் கையை விடுகிறேன்.

''வேண்டாம், ஸாரு ! அதை வெளியே எடுக்க வேண்டாம். யாராவது பார்த்திடப் போறாங்க.... அது எப்படியும் மூணு பவுனுக்குக் குறையாது. கடையிலே வித்தா, மூந்நூத்தி அறுவதுக்கு மேலே கிடைக்கும். அதை நாங்க கொண்டு போய் விக்க முடியாது. போலீசிலே மாட்டிக்குவோம். உங்க மாதிரி பாண்ட், டெரிலின் சட்டை போட்ட பெரிய மனுசங்க கொண்டு போய் வித்தா யாரும் சந்தேகப்பட மாட்டானுவ'' என்று யோசனை செய்கிறான் 'ஒரு முண்டாப் பனியன்'.

''ஞாயமாய் இந்தப் பணத்தை நமக்குள்ளே மூணு பங்கு வைக்கணும். ஆனால் நீ உடம்பை வளைச்சு, குனிஞ்சு கஷ்டப்பட்டு எடுத்துப் பைக்குள்ளே போட்டு, கடையிலே கொண்டு போய் விக்கப் போறியே. அதுக்காக உனக்கு ஒரு சலுகை — நீ பாதிப் பணத்தை எடுத்துக்கிட்டு, பாதியை மட்டும் எங்களுக்குக் குடுத்தாப் போதும், ஸாரு. நூத்திஎம்பது ரூபாய் இருக்கா? எடு.''

என்ன அழகாக 'பிஸினஸ்' பேசுகிறான். இந்தச் 'சுருள் நகைச் சுருட்டு' ! மீண்டும் என் மனத்துக்குள் திருட்டுப் புத்தி ஊடுருவுகிறதே ! நகையை முழுவதும் தலை முழுக வேண்டாம்: ஏதோ பாதியாவது தேறும்.

''என்கிட்டே அவ்வளவு பணமில்லையே அப்பா !.... வேணுமானால் கடையிலே வித்திட்டுப் பணம் கொண்டு வர்றேன்.''

''கடையிலே வித்திட்டு இங்கே திரும்பி வருவேன்னு என்ன நிச்சயம்? அப்படியே நைஸா நழுவிடுவியே ?''

ஆ! கேட்டானே ஒரு கேள்வி, பொட்டில் அடித்த மாதிரி? என்னை எவ்வளவு மட்டமாக நினைத்து விட்டான்? ஏன் நினைக்கமாட்டான் ? இதைவிட என்ன உயர்ந்த 'கௌரவம்' எனக்குக் கிடைக்கும்?

''கையிலே இருக்கிறதைக் குடுத்திட்டுப் போ, ஸாரு.''

பையிலிருந்த அறுபது ரூபாயை எடுத்து நீட்டுகிறேன். மூந்நூற்று அறுபதில் அறுபது போக முந்நூறு ரூபாய் லாபம் என்று 'பாலன்ஸ் ஷீட்' போடுகிறது மனம்.

''சரி, போதும் ஸாரு ! நீ இன்னிக்கு நரி முகத்திலே விழிச்சிருக்கே. உன் பாடு ஜாலி தான்'' என்று சொல்லிச் செல்கிறார்கள் அவர்கள்.

வீட்டில் நுழையும்போதே, ''அடியே!'' என்று கனத்த தொண்டையில் கத்திக் கொண்டே வருகிறேன். மடியில்தான் கனமிருக்கிறதே. வாயில் கனத்துக்குக் கேட்க வேண்டுமா? இந்த மாதிரி அதிகாரமாக மனைவியைக் கூப்பிடுகிற சந்தர்ப்பம், ஒரு புருஷனுக்கு எப்போதோ ஒரு முறைதானே, ஸார், கிடைக்கும் ?

'' என்னை அதிர்ஷ்ட மில்லாதவன் : அதிர்ஷ்டக் கட்டையினு சொல்லிக்கிட்டே இருப்பியே, இதோ பார், உன் புருஷனுக்கு வழியிலே கிடைத்த அதிர்ஷ்டத்தை!'' என்று சங்கிலியை எடுத்து நீட்டுகிறேன். சங்கிலியை வியப்புடன் வாங்கிப் பார்க்கிறாள் அவள். நான் தலை நிமிர்ந்து நிற்கிறேன் பெருமையாக.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

ஆண்டுக்கு ஒரு முறை ஜப்பானில் ஒரு ரயில் சில நிமிஷங்கள் தாமதமாகக் கிளம்பலாம். அதிகபட்சம் போனால் ஆண்டுக்கு இரண்டு தடவை இப்படி நேர்வதுண்டு. ஜப்பானிய ரயில்வே இதைக்கூட வெட்கக் கேடாகக் கருதுகிறது. அதிகாலையில் கிளம்பும் ஏதேனும் ஒரு முதல் ரயில் புறப்படத்தான் இப்படிக் காலதாமதமாகிறது. காரணம், குறித்த நேரத்தில் டிரைவர் படுக்கையை விட்டு எழுந்திராமல் அதிக நேரம் தூங்கிவிடுவதுதான். இதைத் தவிர்க்க இப்




போது ஒரு புதிய ஏற்பாடு செய்திருக்கிறார்கள். டிரைவர்கள் படுக்கும் படுக்கையில் 'மெட்ரெஸ்'ஸுக்குக் கீழே ஒரு பலூன் வைக்கப்பட்டிருக்கும். குறிப்பிட்ட நேரத்தில் டிரைவர் எழுந்திருக்காது போனால் இந்தப் பலூனில் தானியங்கு முறையில் காற்று புகுத்தப்படுகிறது. பலூன் பருத்துக்கொண்டே வந்து டிரைவரைக் கட்டிலை விட்டுக் கீழே தள்ளி விடுகிறது!

ஆதாரம் : 'ஜப்பான்' டைம்ஸ்.'
அனுப்பியவர் : ஜெயா ஜெயராமன்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''ப்பூ!.... வெறும் பித்தளைச் சங்கிலி. மூணு ரூபாய் பெறுது'' என்று உதட்டைப் பிதுக்கி அலட்சியமாக என்னைப் பார்க்கிறாள். நான் திடுக்கிட்டு விழிக்கிறேன்.

''என்ன சொல்றே, பித்தளையா?... நல்லாப் பாரு....!''

''நல்லா என்னத்தைப் பார்க்கிறது? சுத்தமான பித்தளைதான். உங்களுக்கு என்ன தெரியும்? முன்னே பின்னே, பெண்டாட்டிக்கு ஏதாவது தங்க நகை வாங்கியிருந்தாத் தானே தெரியும், தங்கம்னு என்னன்னு?....''

அவள் வழக்கமான பாணியில் என்னென்னவோ என்னைத் தாக்கிப் பேசுகிறாள்.

அவள் பேச்சு என் காதிலே விழவேயில்லை. வழக்கம்போல் அல்ல — உண்மையாகவே அவள் பேசுவதே காதில் விழாமல் ஸ்மரணையற்று நிற்கிறேன் நான்.

முண்டாப் பனியன்கள், சங்கிலியை விற்றதுக்கு முன்னாலே கிடைத்ததைச் சுருட்டிக் கொண்டு நழுவியது இதற்குத்தானா ? அவர்களே, எனக்கு முன்னாலே அந்தப் பித்தளைச் சங்கிலியைக் கீழே போட்டு வைத்து வலை விரித்துக் காத்திருந்தார்களோ ?....

அவர்களுடைய நாடகத்தின் முழுக் கதை வசனம், டைரக்ஷன் எனக்குப் புரிகிறது.

பித்தளைச் சங்கிலி 'ஈஈஈ' என்று என்னைப் பார்த்துச் சிரிக்கிறது !

'சபாஷ்டா, முண்டாப் பனியன்! நீ உண்மையிலே வாத்தியார்தான்: எனக்கு நல்ல பாடம் கற்றுக் கொடுத்திட்டே!''— மானசீகமாக என் 'குரு'வைப் பாராட்டுகிறேன் நான்.

# வர்ணங்கள்

ம. இராஜாராம்



கேசவனின் தனிப்பிரைவேட் காரியாலய வேலை நேரம் முடிந்தது. ஓவியம் வரையும் வெறி பிறந்துவிடும் போதெல்லாம் அவனிடம் உண்டாகிவிடுகிற மனமயக்கம், அப்போதும் ஆட்கொண்டிருந்தது. யாரோடும் பேசவில்லை. காதில் வேறேதும் விழவுமில்லை. நேராக பஸ் ஸ்டாண்டுக்கு நடந்து போய்; அவசரம் அவசரமாக முண்டியடித்து, ஒரு பஸ்ஸில் ஏறி அறைக்கு வந்து சேர்ந்தான்.

மனக் காகிதத்தில் சித்திரம் உருவாகி வெகு நேரமாகியிருந்தது. அதைக் காகிதத்தில் வடிக்காத வரையிலும் பிரசவ வேதனைதான் அவனுக்கு.

அவசர அவசரமாகக் கைகால்களைக் கழுவிக் கொண்டு ஈரம் போயும் போகாமலும் துடைத்துக் கொண்டு வந்து மேஜையின் முன் வந்து அமர்ந்தான்.

மாலையில் டிபன் சாப்பிடவில்லை; பரவாயில்லை — நேரமில்லை.

ஓவியக் காகிதத்தை எடுத்து, சுருள் பிரித்து ஒருமுறை அதைத் தட்டிக் கொடுத்தான். தனக்குத்தானே புன்முறுவலித்துக் கொண்டான். டிராயிங் போர்டில் அதை வைத்துச் சீராக நீவிவிட்டு நான்கு மூலைகளிலும் ஊசிகளைப் பதித்தான். வர்ணப் பெட்டி, பிரஷ், பீங்கான் கிண்ணங்கள் யாவற்றையும் எடுத்து மேஜை மேல் வைத்தான். கண்ணாடிக் கிண்ணத்தில் தண்ணீர் எடுத்து வைத்துக்கொண்டான். அவனுடைய செய்கை ஒவ்வொன்றிலும் அவன் அநுபவிக்கும் இன்பம் நிறைந்த திருப்தி வெளிப்படையாகத் தெரிந்தது.

பென்ஸிலால் மிக மெல்லிய கோடுகளால் அவன் மனத்திலிருந்த சித்திரத்தின் எல்லைகளை வரைந்தான். அவனையுமறியாமல் நெஞ்சம் படபடத்

தது: மூச்சிரைத்தது. முடிந்ததும் ஒரு முறை திருப்தியோடு பார்த்துக் கொண்டான். இன்னும் சில மணி நேரங்களில் இந்தப் பென்சில் கோடுகள்தான் ஓர் அபூர்வமான சித்திரமாக மலரப் போகின்றன. மலர வேண்டும். அவன் முகத்தில் இளநகை அரும்பியது. ஒருவேளை தான் எதிர்பார்ப்பது போல் அந்தச் சித்திரம் அமையாமல் போய் விடலாம்.

தன் மனத் திரையில் காண்பதை அப்படியே வர்ணத்தில் வடிக்கும் திறமை பெற்றவன்தான் சிறந்த ஓவியன் என்று சோழமண்டல ஓவியர் ஒருவர் அவனிடம் கூறியது நினைவுக்கு வந்தது. அப்படியானாலும், தான் சிறந்த ஓவியன் இல்லை. அது எப்படியானாலும் அவனுடைய ஓவியங்கள் நிச்சயமாய்க் கஸ்தூரியைக் கவர்ந்திருக்கின்றன. இந்த நினைப்பு வந்ததும் கேசவன் ஒரு கணம் ஜன்னலுக்கு வெளியே வெறித்துப் பார்த்தான். அவள் என்றுமே தன் ஓவியங்களை வெளிப்படையாகப் புகழ்ந்ததில்லை என்ற சந்தேகம் அவனுக்குத் தோன்றியது. கூடவே, சமீப காலமாய் அவள் பாராட்டைப் பெறுவதற்காகவே தான் வரைவதாகவும் அவனுக்கு இனமறியாத பயம் உண்டாயிற்று. தலையை உலுப்பி விட்டுக் கொண்டு, தான் தனக்காகவே வரைவதாகத் தன் மனத்தைச் சமாதானம் செய்து கொண்டான்.

தூரிகையை நீரில் அலசியதும், அதிலிருந்த வர்ணம் திட்டுத் திட்டாய் நீரில் படிந்து, நீர் நிறம் மாறியது. தூரிகையைத் துணியில் துடைத்து விட்டு, நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான், கேசவன். அவன் பார்வை ஜன்னல் வழியாக வெளியே சென்றது. வெயில் மறைந்து இன்னும் தெரு விளக்குகள் எரியத் தொடங்காத அந்நேரத்தில், தெரு ஏதோ சோகம் நிரம்பியதாக அவனுக்குப் பட்டது. ஆனால் தெருவில் நடந்து செல்பவர்கள் சந்தோஷமாகப் போவதாகத்தான் தோன்றியது. இருந்தாலும் அவர்களின் உள்ளத்தின் அடியில் ஏதோ ஒரு சோகமும் துன்பமும் கப்பியிருப்பதாக அவனுக்குப் பிரமை தட்டியது.

இந்தச் சோகத்தை ஓவியத்தில் வடிக்க வேண்டும். கண்ணால் காண முடியாத, ஆனால் மனத்தால் உணர்கிற இந்த உணர்ச்சியைச் சித்திரத்தில் தீட்ட வேண்டும் என்று பல முறைகள் அவன் நினைத்ததுண்டு. அது நவீன ஓவியப் பாணியில்தான் சாத்தியம் என்பதும் அவன் எண்ணம். ஆனால் கூடவே அவனுக்கு ஒரு பயம். படத்தை வரைந்த பின், கஸ்தூரியிடம் காட்டுகையில், அவள் அதைப் புரிந்து கொள்ளுவாளா? தன் ஓவியத்திலிருந்து தன்னுடைய உணர்ச்சியை அவள் தானாகவே புரிந்துகொள்ளத்தான் எதிர் பார்த்தான். அவளுக்கு அவற்றை வார்த்தைகளினால் விளக்க வேண்டி வந்தால் அதை அவனால் தாங்க முடியாது. அந்த ஏமாற்றம் பயங்கரம் நிரம்பியதாக இருக்கும்.

அந்தப் பயத்திலேயே கேசவன் அந்த ஓவியத்தை வரையும் முயற்சியில் ஈடுபடாமல் இருந்தான். ஆனால் சில சமயங்களில் தோன்றும்: அவள் புரிந்து கொள்ளா விட்டால் என்ன? இன்னும் கேட்கப் போனால், அவள் எதற்காகப் புரிந்து கொள்ள வேண்டும்? இதைப் பற்றி ஒரு முறை அவளிடம் பேசிய போது அவள் மெல்லச் சிரித்துக்கொண்டே அவனுடைய இடது மார்பில் தன் வலது உள்ளங்கையைப் பதித்து, "இங்கே நானிருக்கேன் இல்லே. அப்போ, இங்கே இருக்கிறதெல்லாம் எனக்குத் தெரியாமல் போயிடுமா?" என்றாள். அந்த நேரத்தில் அவ்வார்த்தைகளைக் கேட்டு அவனுக்கு ரொம்பவும் திருப்தியாக இருந்தது. ஏதோ பூரணத்துவம் பெற்று விட்டாற்போல் மனம் துள்ளிக் குதித்தது.

ஆனால் பிற்பாடு அதைப் பற்றி நினைத்துப் பார்க்கையில், 'கஸ்தூரி, அவ்வார்த்தைகளை உணர்ந்துதான் சொன்னாளா?' என்ற சந்தேகம் பிறந்தது. இப்படியெல்லாம் யோசித்துக் கொண்டேயிருந்தால், தன்னால் அவளிடம் ஒரு நாளும் எதுவும் பேசவே முடியாதென்றும் அவனுக்குத் தோன்றும். வார்த்தைகளில் நம்பிக்கை இல்லாததால்தான், தான் ஓவியத்தை நாடுவதாக அவனுக்குப் பட்டது. ஆனால் தன்னுடைய ஓவியங்களுக்கு அந்தளவு சக்தி இருக்கிறதா என்ற ஐயமும் அவனுக்கு உண்டாயிற்று. கூடவே, ஓவியத்துக்கு மட்டும் சக்தி இருந்தால் போதாது; அதைப் பார்க்கிறவர்களுக்கும் புரிந்து கொள்ளும் சக்தி இருக்க வேண்டுமென்றும் தோன்றியது.

ஆனால் எல்லோருக்குமே அந்தச் சக்தி இருந்து விடுமோ? இராது. அதிலும், தான் யாருக்கு அந்தச் சக்தி பூரணமாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறேனோ, அவளுக்கு அது இல்லையோ என்ற சந்தேகம் அவன் மனத்தைத் தின்றது. திடீரென்று, இனமறியாத ஒரு வெறுப்புப் பீறிட, தூரிகையை விசிறியடித்தான். அதிலிருந்து வர்ணம் சிதறிச் சித்திரக் காகிதத்தின் ஒரு பகுதி புள்ளிக் காடாயிற்று. அதையே சற்று வெறித்துப் பார்த்திருந்தவன் ஒரு பெருமூச்சு விட்டு விட்டுத் தலையை உலுப்பிக் கொண்டான். கஸ்தூரிக்கும் அவனுக்கு மிடையே ஏதோ போட்டி மனப்பான்மை நிலவுவதாக அவனுக்குத் திடீரென்று தோன்றியது. இந்த நினைப்பு அவனுக்கே மிகவும் வியப்பைக் கொடுத்ததோடு வேடிக்கையாகவும் இருந்தது. யாருக்கு யாரிடம் போட்டி? யார் இல்லாமல் தான் உயிர் வாழவே முடியாதென நினைக்கிறேனோ அவளோடா தனக்குப் போட்டி? அவனுடைய உதடுகளில் புன்சிரிப்பு வெடித்து மறைந்தது. என்ன போட்டி? எதில் போட்டி?

கேசவன் நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து அமர்ந்து கொண்டான். இரு கைகளையும் தலைக்கு மேலே உயர்த்தி மோட்டு வளையைப் பார்த்தான். சில கண சூன்ய நிலைக்குப் பின் மறுபடியும் உணர்வு வரப் பெற்றவனாக வெளியே நோக்கினான். தெரு விளக்குகள் எரிய ஆரம்பித்திருந்தன. தெருவில் நடமாட்டமும் குறைந்து விட்டிருந்தது.

எழுந்து அறை விளக்கைப் போட்டான். பழைய வெறி மூண்டுகொள்ள, வர்ணம் சிதறியிருந்த பகுதியைச் சுத்தம் செய்தான். கருமேகங்கள் சூழ்ந்த வானத்தின் நிலப் பின்

சூரிய கிரணங்களின் சக்தியைக் கொண்டு சமுத்திர உப்பைப் பிரித்து வீட்டு ஆஸ்திரேலியாவில் உள்ள எல்லா நகரங்களுக்கும் இன்னும் ஐம்பது ஆண்டு காலத்துக்குள் போதிய குடி தண்ணீர் விநியோகம் செய்ய முடியும் என்று ஒரு விஞ்ஞானி நம்புகிறார்.

தகவல்: 'என்யு'

ணியை உருவாக்குவதில் ஈடுபட்டான். மழை 'இதோ வந்துவிட்டேன், வந்துவிட்டேன்' என்று முனகிறது. 'வந்தால் கொட்டித் தொலைத்து விடுவேன் பயங்கரமாய்' என்று அச்சுறுத்துகிறது. இந்தப் பயமுறுத்தலில் நிலமே மயங்கி நிற்கிறது. பச்சை நிறமும், காவி நிறமும், மஞ்சளும் முயங்குகின்றன. தூரத்தில் கறுப்புப் புள்ளியாய் ஒரு வீடு. வீட்டில் எரியும் விளக்கு, ஒற்றைத் துரும்பாய்ப் பளிரிடுகிறது. அதை நோக்கி ஓர் உருவம் ஓடுகிறது. ஓட்டத்திலும் அவசரம், அவசரம், அவசரம்... மழைக்கு முன் அங்கே ஒதுங்கிவிட வேண்டும். ஓடு. ஓடு. அவசரம்.

குமுறி நிற்கும் வானத்துக்கும், மயங்கித் தவிக்கும் பூமிக்கும் பாலமாய் அந்த உருவம் இருக்க வேண்டும். இரண்டிலும் கலங்கி விடாமல், அதே சமயம் இரண்டிற்கும் இரையாகிவிடும் தருணத்தில் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு விடும் துடிப்பையும் அந்த உருவம் காட்ட வேண்டும். அதனுடைய வேகமும், வெறியும், விளக்கெரியும் வீட்டை அடைந்துவிடும் வேட்கையும் அந்த ஓட்டத்தின் அசைவில் வெளிப்பட வேண்டும்.

தான் விரும்பியதை அடைய வேண்டும் என்பதற்காக மனிதன் எதையும் செய்யத் தயாராக இருக்கிறான். தான் அப்படி எதற்கும் தயாராக இருக்கிறோமா என்று யோசித்துப் பார்த்தான். கஸ்தூரிக்காகத் தான் எதையும் செய்யத் தயாராக இருப்பதாகவே அவனுக்குத் தோன்றியது. அவளை எது வெள்ளமோ விரட்டிக் கொண்டு வருவதாகப் பட்டது. என்னென்னமோ அவளைப் பயமுறுத்துகின்றன. இடி, மின்னல், மழை. அவள் மிகவும் தூரத்தில் ஒரு விளக்காக நிற்கிறாள்.

அந்த விளக்கை நோக்கி ஓடுபவனாகத் தன்னை அவன் கற்பனை செய்து கொண்டான். வேறு எதைப் பற்றியும் கவலைப் படாமல் அந்த விளக்கையே ஓர் இலக்காகக் கொண்டு வெறியுடனும் வேட்கையுடனும் தாபத்துடனும் அவன் ஓடுகிறான். எத்தனை விரைவில் அதை அடைய முடியுமோ, அத்தனை விரைவில் அதை அடைய வேண்டும்.

இப்படித்தான் அவனுள் இந்தக் கற்பனை மலர்ந்தது. இது கஸ்தூரிக்குப் புரியுமா என்ற சின்னஞ்சிட்ட சந்தேகம். அவனுள் புரையோடியது. புரியாவிட்டால் போகட்டும், எதற்காக அவளுக்குப் புரிய வேண்டும்? தனக்காகத்தானே, தன்னை வெளிப்படுத்திக் கொள்வதற்காகத்தானே அவன் அதை வரைகிறான்! தன்னை வெளிப்படுத்திக் கொள்ளவா...? யாரிடம்...? கேசவன் இந்த இயலாமையில் அயர்ந்து போனான்.

தன்னையே ஏமாற்றிக் கொள்வதாகத் தோன்றியது அவனுக்கு. அவளுக்காகத் தான் அதை அவன் வரைகிறான், தான் வாயால் சொல்ல நினைப்பதை, சொல்ல முடியாமல் தவிப்பதை — அந்தச் சித்திரத்தின் வாயிலாகக் கூற முயல்கிறோம் என்று அவனுக்கு இப்போது தெளிவாகவே தெரிந்தது. அதை அவள் புரிந்து கொள்ள வேண்டும். புரிந்து கொண்டால் மட்டும் போதாது. அதை மனப்பூர்வமாக அனுபவித்து அவனுக்கு அதை உணர்த்த வேண்டும்.

அவள் ஏன் தன்னுடைய ஓவியம் எதையும் வெளிப்படையாகப் பாராட்டவே மாட்டேன் என்கிறாளென்று அவனுக்குத் தெரியவில்லை. உண்மையாகவே அவளுக்கு அவை பிடிக்கவில்லையா? அல்லது வேண்டுமென்றே அவள் குரூரமாக இருக்கிறாளா? அவனுக்கும் அவளிடம் வலியப் போய்க் கேட்க அவனது சுய கௌரவம் இடம் கொடுக்கவில்லை. தான் மட்டும் அவளுடைய வானொலி நிகழ்ச்சி சங்கீதத்தை நிறையச் சந்தர்ப்பங்களில் பாராட்டியிருப்பது அவனுக்கு நினைவு வந்தபோது ஏதோ இனமறியாத கோபம் அவனுள் மூண்டது. தான் ஏன் மடையன் மாதிரி அவளை அப்படி வாய் விட்டுப் பாராட்ட வேண்டும்?

கேசவனுக்குச் சாட்டையடியாகத் தன் மேலேயே ஒரு வெறுப்பு விசியடித்தது. கஸ்தூரியை மற்றவர்கள் புகழ்கையில் ஏன் தனக்குக் கோபமும் தன் மேலேயே சிறுமை உணர்ச்சியும் பிறக்க வேண்டும்? இது என்ன போட்டி? தானே அதற்கு ஒரு சமாதானமும் கற்பித்துக் கொண்டான். தனக்கு அவளிடம் அத்தனை சொந்தத்தை ஏற்படுத்திக்கொண்டு விடத் தான் துடிப்பதாகவும் மற்றவர்களுக்கு அவளைப் புகழக்கூட அவளிடம் உரிமை எடுத்துக் கொள்ளத் தன்னுடைய மனம் இடம் கொடுக்க மறுப்பதாகவும் தனக்கே அவன் நீதி போட்டுக்கொண்டான்.

முடித்து வைத்திருந்த ஓவியத்தை ஒரு முறை விமரிசன நோக்கோடு பார்வையிட்டான். பரவாயில்லை. ஆனால் விளக்குத்தான் அத்தனை திருப்தியாக வரவில்லை. சுற்றுப் புறத்தை இன்னும் அதிகமாகக் கருமைப் படுத்தினால் ஒருவேளை விளக்கு இன்னும் பிரகாசிக்கக் கூடும். சிவப்பைக் குறைத்து, மஞ்சளை அதிகப்படுத்தியும் பார்க்கலாம். அவனுக்கு ரவி வர்மாவின் 'விளக்கேந்திய பெண்' நினைவில் எழுந்தது. கூடவே தன் இயலாமையும் அவனை பயமுறுத்த வைத்தது. விரக்தி மேலிட எல்லாவற்றையும் அப்படியே போட்டுவிட்டு எழுந்து கால்களில் செருப்பை மாட்டிக் கொண்டு, விளக்கைக் கூட அணைக்கும் நினைவின்றி அறையைப் பூட்டிக்கொண்டு குறிக்கோள் ஏதுமில்லாமல், தெருவில் நடந்தான் அவன்.

நான்கு நாட்களுக்குப் பின் கஸ்தூரியை அவன் சந்தித்தபோது அந்தச் சித்திரத்தை

## அறிவிப்பு

**ஸ்ரீ ரா.கி.மி. சாரதா வித்யாலயா ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் படித்த பழைய மாணவிகளுக்கு ஒரு வேண்டுகோள்.**

சகோதரிகளே,

இப்பள்ளியை நிறுவிய காலஞ்சென்ற சகோதரி ஆர். எஸ். சுப்புலக்ஷ்மி அம்மாள் ஞாபகார்த்த நிதி ஒன்று பள்ளியில் ஏற்படுத்தப் படும். இந்த நிதியிலிருந்து வரும் வட்டியைக் கொண்டு தகுதியுள்ள பயிற்சிபெறும் மாணவிகளுக்கு, (குறிப்பாக கைம்பெண்களுக்கும், அனாதைகளுக்கும்) உபகாரச் சம்பளமும் முடிந்தால் ஆண்டுத் தேர்வில் பரிசுகளும் கொடுக்கப் படும். இப்பள்ளியில் பயிற்சிபெற்ற பெண்கள் அனைவரும் இந்த நிதிக்கு தங்களால் இயன்ற அளவு நன்கொடை கொடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். பணத்தை நேரிலும் கொடுக்கலாம். 5-4-1970 அன்று மாலை சுமார் 3 மணியளவில் நடக்கவிருக்கும் பழைய மாணவியர் சங்கக் கூட்டத்திற்கு வந்தும் கொடுக்கலாம். இதற்கு நேரில் வந்து கொடுப்பது மிகவும் சிறந்ததாகும். வரமுடியாதவர்கள் தொகையை அனுப்பி வைக்கலாம். அனுப்புபவர்கள் அவர்கள் பயிற்சி பெற்ற வருஷங்களைக் குறித்தால் நலமாயிருக்கும்.

இப்படிக்கு

கோகிலா காளஹஸ்தி

தலைமை ஆசிரியை & நிர்வாகி

ஸ்ரீ ரா.கி.மி. சாரதா வித்யாலயா ஆசிரியப் பயிற்சிப் பள்ளி, 6, பர்கித் ரோடு, தி. நகர், சென்னை-17 இந்த விலாசத்துக்குப் பணம் அனுப்பலாம்.

## தி பாரதீய ம்யூஸிக் & ஆர்ட்ஸ் சொஸைட்டி (Regd.)

**11/138, பூர்ணிமா, வடாலா, பம்பாய்-31**

போன்: 473598, 472838

**மகத்தான இரட்டை வயலின் கச்சேரி**

ஸ்ரீ வி. வி. சுப்பிரமணியம்—மாஸ்டர் ரவி

ஸ்ரீ டி. கே. மூர்த்தி ... மிருதங்கம்

ஸ்ரீ வி. நாகராஜன் ... கஞ்சிரா

ஸ்ரீ டி. எச். விநாயக்ராம் ... கடம்

**8-3-1970 ஞாயிறு மாலை 5-30 மணிக்கு**

பம்பாய் கிங்க் சர்க்கிள்
ரயில்வே ஸ்டேஷன் அருகிலுள்ள
மேற்படி சொஸைட்டி கட்டடத்தில்

ஸ்ரீ டி. சதாசிவம் அவர்களும்
சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி
அவர்களும் பிரதம விருந்தினர்களாக
கலந்து கொள்கிறார்கள்.

GUESTS: ரூ. 10/-, 5/-

வி. வி. நரசிம்மன், எஸ். ராமகிருஷ்ணன்
கௌரவ காரியதரிசிகள்

# நோவா
## பிரில்லென்டைன்







சாஸ்திரிய முறைப் படி தயாரிக்கப்பட்டு 30 ஆண்டுகளாகப் பல லக்ஷக்கணக்கான மக்களால் உபயோகிக்கப் பட்டு வருகிறது. நீங்களும் வாங்கி உபயோகித்துப் பயன் பெறுங்கள்.

தயாரிப்பாளர்கள்: **தி நோவா கம்பெனி** ஆக்ரா ரோடு, பாண்டுப், பம்பாய்-78

LAK

# உடல் தேய...

ஒவ்வொரு நிமிடமும்
உழைப்பிலே செலவழிகிறது
அவர் உள்ளடங்கிய க்ளுகோஸ்!





**களைப்பு என்றால் உங்கள் உடம்பு க்ளுகோஸுக்காக ஏங்குகிறது என்றே பொருள். சக்தியைக் கணநேரத்தில் மீட்டுத் தருகிறது தூய க்ளுகோஸ் பவுடராகிய க்ளாக்ஸோஸ்-D**

நம் உடம்பிலே சக்தியைத் தோற்றுவிக்கும் 'மூலதனம்' க்ளுகோஸ். களைப்பு மேலிடும்போது க்ளுகோஸ் சாப்பிட்டவர்களால் தெம்பு மீளும். பால், பழச் சாறுகள், குடிநீர் ஆகியவற்றுடன் சேர்த்தோ, நேரடியாகவோ உண்பதற்கு உகந்தது க்ளாக்ஸோஸ்-D. மறவாதீர்கள், யாவரும் விரும்புவது இன்சுவையுள்ள க்ளாக்ஸோஸ்-D.

உடனடியான சக்தி பெற, ஒருசில காசுகளே செலவு!



## க்ளாக்ஸோஸ்-D

க்ளாக்ஸோவின் க்ளுகோஸ் பவுடர்.

dCA-GL 4a tam

அவனுக்குக் காட்டினான். அந்தச் சுருளைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து அதை அவள் பிரிக்கும்வரையில்கூடக் காத்திருக்க முடியாது போல் அவனுடைய எதிர்பார்ப்பு அவனை ஆட்டியது. அவள் அதைச் சற்று நேரம் ஊன்றிப் பார்த்தாள். கேசவன் அவளுடைய முகத்தைக் கூர்ந்து நோக்கி அவளுடைய எண்ணங்களைப் படித்துவிட முயன்று தோற்றான்.

அவளோ ஒன்றுமே கூறாமல் அந்தச் சித்திரத்தை மறுபடியும் சுருட்டிக் கயிற்றால் கட்டி அவனிடம் கொடுத்தாள். 'என்ன, ஒண்ணுமே சொல்லலே?' என்ற வார்த்தைகள் அவன் தொண்டை வரை வந்து, வழக்கம் போல் சுருண்டு உள்ளேயே விழுந்தன. அவளுக்கு அவளைப் 'பளார் பளார்'ரென்று அறைந்து தள்ளி விடலாம் போல வெறி மூண்டது. அந்தச் சமயத்தில் அவளுடைய உதடுகள் பிரிவதைக் கவனித்த அவனுள் ஒரு சபலம் தட்டியது. ஏதோ சொல்லப் போகிறாள். என்ன சொல்லப் போகிறாள்?" 'விளக்காக என்னைத்தானே போட்டிருக்கிறீர்கள்?' என்று கேட்பாளா, இல்லை, 'நன்றாக இருக்கிறது' என்று ஒரே வார்த்தையில் சொல்லி நிறுத்தி விடுவாளா?

''வர வெள்ளிக் கிழமை எனக்கு ரேடியோ 'ப்ரோகிராம்' இருக்கிறது. உங்களுக்கு நினைவிருக்கில்லே?'' என்றாள் அவள்.

அவன் தன் ஏமாற்றத்தையும், ஏக்கத்தையும் கசப்பையும் அடி நாக்கிலிருந்து வழித்து விழுங்கிக் கொண்டு, ''ஏன் நினைவில்லாமல்?'' என்று கேட்டு, இரு விநாடிகளுக்குப் பின் ''வெள்ளிக் கிழமை எப்ப வரும்னு நானே எண்ணிக்கிட்டில்லே இருக்கேன்!'' என்றான். இவ்வார்த்தைகளின் ஒலி தேயு முன்பே இவற்றைத்தான் ஏன் சொன்னோம் என்று தன்னைக் கடிந்து கொண்டு, சொல்லியிருக்க வேண்டாமாயிருந்தது என்று தனக்குள் அலுத்துக் கொண்டான்.

இவள் தன் சித்திரத்தைப் பற்றியே அடியோடு மறந்து விட்டாளா? ஒரு வார்த்தை; ஒரே ஒரு வார்த்தை; மஹூம். என்ன அலட்சியம்! என்ன புறக்கணிப்பு! தன் பாட்டைப் பற்றிப் பேசுகிறாள்! பொல்லாத சங்கீதம்! ஊர் உலகத்தில் யாரும் பாடாததை இவள் பாடுகிறாளாக்கும்! சூடாக ஏதேனும் சொல்லி விட அவன் நாக்குத் துடித்தது. அந்தப் பொழுதில் கஸ்தூரி அவனுடைய கைவிரல்களைத் தன் விரல்களோடு பிணைத்துக் கொண்டு இதமாக அழுத்தியவாறே ''என்ன பேச்சையே காணோம்? பலமான யோசனையோ?'' என்றாள். அவனுடைய சூடு தணிந்த வேகம் அவனுக்கே வியப்பை அளித்தது. இவளுடைய மனத்தை எப்படித் தன்னால் குத்த முடியும்? அப்படிக் குத்திவிட்டால் அந்த மனத்தில் இருக்கும் தன் மேலேயே தானே அது பட்டுவிடும்!

வெள்ளிக் கிழமை அவளுடைய பாட்டைக் கேட்டான். அவள் வழக்கம் போல் தான் பாடினாள். ஆனால் அவள் மிகவும் மோசமாகப் பாடுவதாக அவன் தனக்குள் திரும்பத் திரும்பச் சொல்லி உறுதி செய்து கொண்டான். அப்போது அவனைப் பார்க்க வந்திருந்த நண்பனும், 'என்னப்பா இது! கெழவி அழுகையையெல்லாம் வச்சுக்கிட்டு!' என்றதும் அவனுள் குரூரமான ஒரு திருப்தி படர்ந்தது.

அடுத்த முறை கஸ்தூரியை அவன் சந்தித்ததும் எடுத்த எடுப்பிலேயே அவள், ''கச்சேரி கேட்டீங்களா? எப்படி இருந்தது?'' என்றாள். இந்த மாதிரி கூச்சமின்றி எப்படி இவளால் கேட்க முடிகிறது? இவளும் நான் அவளுடைய சங்கீதத்தைப் புகழ வேண்டும் என்றுதானே எதிர்பார்க்கிறாள்? என் புகழ்ச்சியில்தானே மகிழ்ச்சி யடையப் போகிறாள்? ஆனால் இதேபோல் என் எதிர்பார்ப்புக்களுக்கு மதிப்புக் கொடுக்க மாட்டேன் என்கிறாளே!

கேசவனின் இதயத்தில் வேகம் பொங்கியது. குரலைக் கட்டையாக்கிக் கொண்டு, தலையைக் குனிந்தவாறே, ''ஒண்ணும் சுகமில்லே!'' என்றான். கூடவே ஏதோ தனக்குப் பாதுகாப்புத் தேடிக் கொள்கிற அவசரத்தில் ''என் ஃப்ரெண்டு கூட 'ஒரே அழுகையாயிருக்கே'ன்னான்!'' என்றான். ஏதோ வெற்றியின் எக்களிப்பில் அவனுக்கு மூச்சிறைத்தது. நிமிர்ந்து கஸ்தூரியின் முகத்தைப் பார்த்தான். அந்தச் சமயத்தில் தன் முகமே மிகவும் குரூரமாக மாறிவிட்டாற்போல் அவனுக்குத் தோன்றியது.

கஸ்தூரி அவனைச் சில கணங்கள் கூர்ந்து நோக்கிவிட்டு, ஏளனச் சிரிப்பொன்றைத் தன் உதடுகளில் வெடிக்க விட்டு, ''உங்களுக்குச் சங்கீதத்தைப் பற்றி என்ன தெரியும்?'' என்றாள்.

அவனுக்கு இது எழுந்திருக்க முடியாமல் கீழே தள்ளிவிட்ட அடியாக இருந்தது. 'எப்படி இவளால் இந்தமாதிரிப் பேச முடிகிறது? தனக்கு ஏன் இப்படிப் பேச வரவில்லை?' என்று நினைத்துக் கொண்டான், கேசவன்.

## ஊரும் பேரும்

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழக ஊர்களுக்கு வழங்கிய பெயர்கள் கீழே கொடுக்கப்படுகின்றன. எங்கே, அவற்றின் இன்றைய பெயர்களைக் கண்டுபிடியுங்கள், பார்க்கலாம்.

(1) குடவாயில் (2) வெண்ணி (3) கழுமலம் (4) தகடூர் (5) வீரநாராயண சதுர்வேதிமங்கலம்.

பதில்:

(1) குடவாசல் (கும்பகோணம் அருகில்) (2) கோயில் வெண்ணி (தஞ்சாவூருக்கு 15 மைல் கிழக்கே) (3) சீர்காழி (4) தர்மபுரி (5) காட்டுமன்னார் கோயில் (தென்னார்க்காடு மாவட்டம்.)

—பரிமளசுந்தரி




பெட்டிக்குள் உள்ள கடிதம் ரூ. 15 பெறுகிறது.

அண்மையில் பாரதத்துக்கு அமெரிக்கா ஈந்து வந்த கடன் வசதியிலும், பிரிட்டன் இங்கிருந்து இறக்குமதி செய்து வந்த துணி இறக்குமதிகளிலும் பெருவாரியான அளவுக்கு வெட்டு செய்யப்பட்டுள்ளது. நாது அரசினரையும் துணி ஏற்றுமதியாளரையும் திகைக்கொள்ளச் செய்திருக்கிறது.

ஒரு கட்சியின் விருப்பத்துக்கிணங்க சட்டங்களை வகுத்து, மாஜி மன்னர்களுக்கு முன்பு அளித்த வாக்குறுதிகளை மீறுவதும், சொந்துரிமைகளையும் தொழில் நடத்தும் உரிமைகளையும் பறிப்பதும் அன்றாடச் செய்திகளாகிவிட்டன.

இத்தகைய மனப்பான்மையோடு செயல்படும் அரசும், கட்சிகளும், அவர்களுக்கு ஆதரவு தரும் மக்களும் பிற நாடுகளிடமிருந்து மாத்திரம் தார்மிக நெறி கோருவது எந்த நியாயத்தைச் சேர்ந்தது ?

கண்ணாடி வீட்டில் வசிப்பவர் பிறர் மேல் கல் எறியக் கூடாது.

சென்னை — 10
14—2—70 மீரூட்டிதிருச்ஞா

நான் கடந்த 31—1—70 அன்று சென்னை கடற்கரை சந்திப்பிலிருந்து மின்சார ரயில் மூலமாகச் சைதாப்பேட்டைக்கு டிக்கெட் பெற்றுக் கொண்டு புறப்பட்டேன். குறிப்பிட்ட அந்த ஸ்டேஷனில் இறங்குவதற்குள்ளாகக் கூட்ட நெரிசலில் இறங்க முயன்ற பொழுது மின்சார வண்டி மின் வேகத்தில் புறப்படத் தொடங்கிற்று. அத்தருணம் இறங்குவது ஆபத்தென்று உட்கார்ந்துவிட்டு மறுஸ்டேஷன் கிண்டியில் இறங்கினேன். நான் எண்ணியிருந்தால் அங்கிருந்து மறுபுறம் வரும் வண்டியில் ஏறிச் சைதையை அடைந்திருக்க முடியும். ஆனால் என் மனசாட்சி இடங் கொடுக்கவில்லை. ஆதலின் டிக்கெட் பரிசோதகரிடம் சென்று நடந்தவற்றைச் சொன்னேன். நான் டிக்கட் இல்லாமல் செய்த பிரயாணக் கட்டணம் இருபது காசு. ஆனால் அவரோ இருபது காசுடன் அபராதமாக ரூபாய் பத்து கட்டச் சொன்னார். எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் கேளாமல் ரூ. 10—20 என்னிடமிருந்து வசூலித்துக் கொண்டார்.

நேர்மைக்குக் கிடைத்த அன்பளிப்பு அது. டிக்கட் இல்லாமல் நாற்றுக்கணக்கான நபர்கள் பிரயாணம் செய்கிறார்கள். அதற்குச் சரியான தண்டனை இல்லை. நானாகவே வலியச் சென்று நடந்த உண்மையைச் சொன்னதற்கு அபராதம் பத்து ரூபாய் !

சென்னை — 1
17—2—70
எஸ். முஹம்மத் அன்வர்

கடந்த 25—1—70 அன்று இரவு நேரம் சுமார் ஒரு மணிக்கு நிகழ்ந்த நிகழ்ச்சி இது! வீதியில் ஒரு சிறிய கூட்டம் காணப்பட்டது. சூதாட்டம் ஆடிய சிலரைப் போலீசார் பிடித்திருந்தனர். தப்புவிக்க முயன்ற மூவரில் ஒருவர் பணத்தை ஒரு வீட்டில் ஒளித்து வைத்துவிட்டார். பணம் இருக்கும் இடத்தை அறிய முயன்றபோது அவருக்கு அடி, உதை தாராளமாகக் கிடைத்தன. வேடிக்கை பார்த்த கூட்டத்தில் ஒருவர், "நாலணுவைக் கொண்டு நாற்பது ரூபாய் பெற ஆசைப்படும் இவனை யெல்லாம் நல்லா உதையுங்க ஸார்!" என்று ஏசினார். மற்றவர்களும் ஆமோதித்தனர். ஒரு பெரியவர், "நாலணுவைக் கொண்டு 40 ரூபாய் பெற ஆசைப்படும் இவனையெல்லாம் இவ்வளவு உதைக்கணும் என்றால், ஒரு ரூபாய் கொடுத்து ஒரு லட்சம் பெற நினைப்பவங்களை எப்படி உதைக்கணும்?" என்று கேட்டார். எல்லாரும் வாயடைத்துப் போயினர்.

அப்போதே நான் வாங்கியிருந்து பரிசுச் சீட்டுக்கள் அனைத்தையும் கிழித்து எறிந்தேன். அளவற்ற ஆசையை ஒழிக்கும் மன வலிமை தந்த அப் பெரியவரின் முகம் என் கண்களிலிருந்து என்றும் மறையாது.

அருப்புக்கோட்டை.
20—2—70 எம். ரவீந்திரன்

கல்கி 22—2—70 இதழில் என்ன சேதி பகுதியில் ஆதிமூலம் மறைவு என ஒரு செய்தி பிரசுரிக்கப்பட்டுள்ளது. அதில் திரு ஆதிமூலம் அம்பாசமுத்திரம் தொகுதி மக்களின் பிரதிநிதி எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது தவறு. இவர் சேரன்மாதேவி சட்டமன்ற உறுப்பினர்.

கோவில்பட்டி.
19—2—70 ஜி. பிச்சாண்டி

நான் இருக்கும் தெருவில் ஏற்கனவே ஒரு பக்கத்தில் பிளாட்பாரம் போடப்பட்டுள்ளது. சில தினங்களுக்கு முன்பு, மற்றொரு பக்கத்தில் பிளாட்பாரம் போடும் வேலை நடைபெற்றது. சிமெண்ட் ஸ்லாப்புகள் நடப்பட்டுச் சாய்வுக்கு சிமெண்டும் பூசப்பட்ட பின் சிமெண்டு ஸ்லாப்புகள் அப்புறப்படுத்தப்பட்டு விட்டன. உழைப்பு, மற்றும் இதர செலவுகள் யாவும் வீண். அன்று வேலை செய்த வேலையாளைக் கேட்டபோது மீண்டும் போடுவார்கள் என்பது தெரிய வந்தது !

கசக்கிப் பிழிந்து வசூல் செய்யப்படும் பொதுமக்களின் வரிப்பணம் விணடிக்கப்படலாமா?

சென்னை — 33
20—2—70 எம். ஆர். ராஜன்

# வாழ்வில் இன்பம்
# பன்மடங்காகும்
## உமக்கென ஒரு ஜெம் இருந்தால்

வாங்கிக்கொள்ளுங்கள் ஒரு ஜெம்...போகமயமான ஒரு புத்துலகம் உங்களை வரவேற்கும்...கடை கண்ணிக்குப் பல நடைகள் போக வேண்டியிராது...உணவுகள் அதிக நேரம் புதுமையோடு இருக்கும்... திடீர் விருந்தாளிகளைக் கண்டு திடுக்கிட வேண்டியதில்லை...அக்கம் பக்கத்தோரின் மெச்சும் விழிகள் உங்கள் மீது படரும் (பொறாமைக் கண்களும் கூட!) ஆம், உமது இல்லத்திற்கென ஒரு ஜெம் இருந்தால் இன்பம் பன்மடங்காகும். இழைவான எழிலும் இடவசதியும் மிகுந்தது ஜெம். சேவைத்திறனும் சிக்கனமும் மிக்கது. சுருங்கக் கூறின், நல்ல ரெப்ரிஜிரேட்டருக்கு உள்ள எல்லாப் பண்புகளும் அதற்கு உண்டு. மேலும் உண்டு!

எடுப்பான இதர ஜெம் சிறப்புகள்:

▼ ரெப்ரிஜிரேட்டர்-டீப் ஃப்ரீஸர் இரண்டுமிணைந்தது ▼ தானாக இறுக மூடிக்கொள்ளும் புதிய ஆட்டோமேட்டிக் காந்தக் கதவு ▼ குறைந்த மின் செலவு. ▼ சேமிப்புக்கென அதிக அதிக இடப் பரப்பு ▼ ஐஸ், ஐஸ் க்ரீம் இரண்டையும் அதிவிரைவில் உருவாக்கும். ▼ ஓசையற்ற இயக்கம் ▼ உத்தரவாதமாகக் கட்டிறுக்கமாக மூடிய யூனிட்.

286 லிட்டர் மற்றும் 175 லிட்டர் கொள்ளளவுகளிலே கிடைக்கிறது. விலைவிகித ஒப்பந்தப்படி D.G.S. & D.யிடமும் கிடைக்கிறது.






விற்பனைக்கு விடுப்போர்:
ஜெனரல் எக்விப்மெண்ட் மர்சென்ட்ஸ் லிட்
பம்பாய் • கல்கத்தா • சென்னை • அகமதாபாத்
• பெங்களூர் • சண்டிகார் • எர்ணாகுளம்-கொச்சின்.
• ஜெய்ப்பூர் • லக்னௌ • செகந்தராபாத்
ரிஜி. ஆபீஸ் N-75 கன்னாட் ஸர்க்கஸ், புது டெல்லி.

AIYARS GEM 35 TM

இவனுடைய ஆரோக்யத்தின் ரகசியம்

# அமிர்தாஞ்சன் கிரைப் மிக்சர்!

உங்கள் குழந்தை எப்படி இருக்கிறது?



அமிர்தாஞ்சன் லிமிடெட்

PDSAGM1267TM

பண்டிட்

டி. கோபாலாசார்லுவின்

**ஜீவாம்ருதம்**

ஆரோக்யத்திற்கும், பலத்திற்கும்

**அருணா**

மாதர்களின் ஆரோக்யத்திற்கு

**பாலப்ராஸ**

குழந்தைகள் டானிக்

**ரக்தசோதகா**

சிறந்த ரத்தசுத்தி ஔஷதம்

**சயவனப்ராசனம்**

இருமலுக்கு

**ஆயுர்வேதாஸ்ரமம்**

பிரைவேட் லிமிடெட்

100, [illegible] ரோட், சென்னை

# மூல நோயை

முற்றவிடாமல்

நம்பிக்கையான

**ஹெடன்ஸா**

உபயோகித்து

நிவாரணம்

அடையுங்கள்;

—ரண

சிகிச்சையையும்

தடுங்கள்



# ஐந்தே காசு போதும்

# உங்கள்

# குடும்பம்

# பெருகாமல்

# தடுக்க!



நிரோத் உபயோகியுங்கள். ஆண்கள் சுலபமாக உபயோகிக்கக்கூடிய உயர்தர ரப்பரினாலான இக் கருத் தடைச் சாதனம் எளிமையானது, தீமையற்றது. நிரோத் இப்பொழுது நாடெங்கிலும் கிடைக்கிறது.

**உங்கள் குடும்பம் பெருகாமல் தடுக்கும் சக்தி உங்களிடமே இருக்கிறது.**

இப்பொழுது
நாடெங்கிலும்
கிடைக்கிறது

**15 காசுக்கு 3**

அரசாங்க ஆதரவினால்
குறைந்த விலை

## நிரோத்

உபயோகியுங்கள்



**உயர்தர ரப்பரினாலான
கருத்தடைச் சாதனம்
ஆண்களுக்கானது**

வீட்டுச் சாமான்கள், மருந்து,
சிகரெட் விற்கும் கடைகளில்
கிடைக்கும்.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4309
Registered as a Newspaper in Ceylon